உங்கள் கேசத்தை ஆரோக்கியமுடன் பளபளப்பாக வைத்திருப்பது

# பிரில்க்ரீம்

எண்ணெய்ப்
பற்றோ
கலைசலோ
இராது

**பிரில்க்ரீம்** மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாருக உரோமம் கலையாமலும் சேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது-ஒருமுறை தடவி வாரிக் கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக் கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.

இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்

கருமையோடு பளபளக்கும் ஆரோக்கியமான கேசத்திற்கே!



# வசீகரமான வனப்பைப் பெறுங்கள்...
# முகத்திற்கு மோகன மென்மை அளியுங்கள்!

வெண்பனிபோன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தடவிக்கொண்டால் உங்கள் சருமம் மிருதுத்தன்மை பெற்று, மழமழப்பாக, பளிச்சென்று திகழும்... முகத்தில் கரும்புள்ளிகள் வராமல் தடுப்பதோடல்லாமல், காற்றிலும், வெய்யிலிலும் சருமம் வரட்சி யடையாமல் பாதுகாக்கும். அதைத் தனியாகத் தடவிக் கொள்ளலாம் அல்லது அதன் மீது பவுடர் போடலாம். பவுடர் ஒரேசீராகப் படிந்து, மணிக் கணக்காகக் கலையாமல் இருக்கும். உலகெங்கும் பேரழகிகள் பலரும் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கின்றனர்.




**பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம்—பவுடர் ஒற்றிக்கொள்ள ஒப்பற்ற க்ரீம்.

**சீஸ்ப்ரோ**-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

P 5590



# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, புரட்டாசி 22 - அக்டோ. 8







"என்ன தேடுகிறீர்கள்?"

"ஜுயிங்கம்மை மென்றுகொண்டே யிருந்தேன். இங்கே விழுந்துவிட்டது. தேடுகிறேன்"

"ஜுயிங்கம்தானே? போனால் போகட்டும். அதற்கேன் சிரமப்படுகிறீர்கள்?"

"விழுந்தது ஜுயிங்கம் அல்ல ஐயா, அதில் ஒட்டிக் கொண்டிருந்த என் பற்கள்தான்!"

— ஆர். சலாமுல்லா


காந்தி
மொரார்ஜி, என்ன காரியம் செய்கிறீர்கள்?


அணுக்குண்டு
அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்தை ஆட்சேபிக்கிறேன்


மகராஷ்டிரத்துக்கு என்ன நேர்ந்துவிட்டது?
சிவாஜி


கோகலே


திலகர்


மகராஷ்டிரம்
மராட்டியருக்கே
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 10



# சவாலை ஏற்குமா?

"நகராட்சித் தேர்தல்களில் கட்சி அரசியலை ஒழித்துவிடுவதாகக் காங்கிரஸ் தீர்மானம் நிறைவேற்றினால் மறு நாளே தி. மு. கழகமும் அப்படித் தீர்மானம் செய்யும்'' என்பதாகச் சில நாட்களுக்குமுன் திரு மு. கருணாநிதி திருச்சியில் அறிவித்தார். அதையே முதன் மந்திரி திரு அண்ணாதுரை அவர்களும் சமீபத்தில் வலியுறுத்தியுள்ளார்.

'காங்கிரஸ் முன் வந்தால் நாங்களும் அதே வழி செல்வோம்' என்று தி. மு. க. சொல்வானேன் என்று தோன்றக்கூடும். இன்று பெரும்பாலான ஸ்தல ஸ்தாபனங்கள் காங்கிரஸின் கையிலிருப்பதால், அதிகாரத்திலுள்ள அவர்களே முதல் நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியம் அல்லவா ?

ராஜ்யத்தை ஆளும் கட்சியிலிருப்பவர்களுக்குத் தங்கள் ஆட்சியை நகர — கிராம நிலை வரை வேர் ஓடச் செய்து நிலைநாட்டிக் கொள்ள நல்ல வாய்ப்பு உண்டு. இதைப் புறக்கணிக்க எந்த ஆளும் கட்சிக்கும் மனம் வராது. இருப்பினும் தி. மு. க. முன்வந்திருப்பதைப் பார்க்கும்போது மனமார, வாயாரப் பாராட்ட வேண்டியதுதானே ?

ஊருக்குப் பொதுவான குடிநீர்ப் பிரச்னை, தெருக்கள் சுத்தம் செய்தல் போன்ற பணிகளே ஊராட்சிக்குரியன. இங்கு கட்சி அரசியலுக்கே இடமில்லை. கட்சி அரசியல் புகுந்தால் ஊர் பிளவு பட்டு, சதா வன்மமும், மாற்சாரியமுமே மேலோங்கிவிடும். எனவே ஊராட்சித் தேர்தல்களில் கட்சி அரசியல் வேண்டாம் என்று பலரும் எடுத்துச் சொல்லி வந்திருக்கிறார்கள். எண்பதாண்டு காலம் வாழ்ந்த காங்கிரஸ், தானே நிரந்தரமாகத் தில்லியிலிருந்து பட்டிதொட்டி வரை ஆளவேண்டும் என்ற பேராசையில் பெரியோர்களின் யோசனைகளைக் கேளாமல் இருந்து வந்தது!

ஆனாலும் இவ்வாறு ஸ்தல ஸ்தாபனங்களை யெல்லாம் கையில் போட்டுக் கொண்டதால் அது எதிர்பார்த்தது போல் மாநில, தேசிய அடிப்படையில் அதற்குத் தேர்தல் வெற்றி கிட்டிவிடவில்லை. அதெப்படியாயினும் காங்கிரஸ் கடைப்பிடித்த முறையைப் பின்பற்றி பஞ்சாயத்துக்களில், நகரசபைகளில் தனது கட்சியைப் பதவியில் அமர்த்திவிட இன்று தி. மு. க.வுக்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. இருப்பினும் அதைத் தியாகம் செய்ய முன் வந்திருப்பதிலிருந்து தி. மு. க. தனது ஆட்சியில் சில நல்ல கோட்பாடுகளைக் கடைப்பிடிக்கத் தயாராக இருக்கிறது என்பதையே உணருகிறோம். அன்றாடப் பிரச்னைகளில் அரசியல் வாடையும் அதைத் தொடரும் சர்ச்சைகளுமின்றிச் சூழ்நிலையைத் தூய்மைப் படுத்துவது சமூகத்துக்கு மிகவும் பயனளிக்கும் காரியம்.

இப்பொழுதாகிலும், கட்சி அரசியலை நாட்டு வாழ்வின் சகல கட்டங்களிலும் கலக்கும் எண்ணம் காங்கிரஸ்காரர்களுக்கு இல்லை எனில், தி.மு.க. விடுக்கும் சவாலை ஏற்கவேண்டும். ஊராட்சித் தேர்தல்களில் கட்சி அரசியலை புகுத்துவதில்லை என்று தீர்மானிக்க வேண்டும்.

தி. மு. க.வுடன் சேர்ந்து, ஒவ்வொரு நகரத்திலும் மக்களின் அன்புக்கும் மதிப்புக்கும் நேர்மைக்கும் நியாயத்துக்கும் பெயரெடுத்தவர்களை ஊராட்சி மன்ற அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்க மக்களுக்குக் காங்கிரஸ் வாய்ப்பளிக்க வேண்டும்.

இப்பொழுதெல்லாம் எந்தக் கிராமத்தில், எந்தச் சேரியில் சிறு குடும்பச் சண்டையோ, சச்சரவோ நடந்தாலும் காங்கிரஸ்காரர்கள் அதனை அரசியல் கட்சிச் சண்டையாக மாற்றி கோரச் சித்திரம் வரைய முன்வந்து விடுவதாக அபவாதம் இருந்து வருகிறது. இதனை அவர்கள் அறவே களைய வேண்டும். அதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பு. இதனையும் காங்கிரஸ் இழந்து விட்டால், மக்களின் மதிப்பைக் காங்கிரஸ் அடியோடு இழந்துவிட வேண்டியதுதான்!

# என்ன சேதி?

★ விரைவில் குணம் பெறுக!

★ தடுப்புச் சுவர் தகராதா?

★ பம்பாயில் முருகன்

★ நவராத்திரிக்கொரு நற்பணி

தி. மு. க. மந்திரி சபையில் கூரிய மதி நுட்பமும், வேகமாகச் செயலாற்றும் திறமையும் பெற்ற ஒருவர் திரு மு. கருணாநிதி.

அவர் பயங்கரமான கார் விபத்துக்குள்ளானார் என்ற செய்தி கேட்டுத் தமிழகமே நிலை கலங்கிவிட்டது. தெய்வாதீனமாகத் தப்பி விட்டார். அவரைக் காப்பாற்றித் தந்த இறைவனுக்குத் தமிழக மக்கள் நன்றி கலந்த வணக்கங்களைத் தெரிவிக்கிறார்கள். காலம் பாராமல் இரவு இரண்டு மணிக்கு, எல்லாருக்கும் ஆழ்ந்த தூக்கம் வரும் நேரத்தில் திரு மு. க. கார் பிரயாணம் தொடங்கியிருக்கிறார். உடலுக்கு ஓய்வு தர வேண்டிய நேரத்தில் பிரயாணம் செய்வானேன்? எவ்வளவோ வேலைகள் இருக்கலாம். இருப்பினும் அதற்காக தேக நலத்தைப் புறக்கணிக்கக் கூடாது. திரு கருணாநிதி விரைவில் பூரண குணமடைந்து பழையபடி நமது அலுவல்களைக் கவனிக்க நல்லோர்கள் ஆசி அவருக்குத் துணை நிற்கும்.

ராஜ்யவாரி உணவு மண்டலங்கள் அப்படியே இருக்கவேண்டுமென்று முதன் மந்திரிகள் மாநாடு தீர்மானித்துவிட்டது. எந்தத் துறையில் பார்த்தாலும் பிரதேசத்துக்குப் பிரதேசம் சுற்றுச் சுவர்கள் எழுப்பிக்கொண்டு விடுவதே இன்றைய நடைமுறையாயிருக்கிறது. தேவைப்படும் இடங்களுக்குத் தங்குதடையின்றி இயற்கையாகச் செல்ல வேண்டிய உணவுக்குத் தடுப்புச் சுவர் நீண்ட காலமாக

## காமகோடியின் கருணைமொழி

இருபதினாயிரம் ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது என்று செய்தி வந்தால் ஒருவன், 'ஹா' என்று ஒருகணம் அப்படியே வாயைத் திறந்து கொண்டு உட்கார்ந்து விடுகிறான். அப்போது சுவாசம் நின்றுவிடுகிறது. மூர்ச்சையாகி மனசும் இல்லாமல் போய்விடுகிறது. சில விநாடிகளுக்கப்புறம் 'அப்பாடி' என்று சுவாசம் வெளிப்படுகிறது. அளவுக்கு மீறி இன்பம் வந்தால் மட்டுமல்ல, துக்கம் வந்தாலும் சுவாசம் நின்றுபோகிறது. மனசும் நின்று விடுகிறது; அதாவது லயித்துப் போகிறது. சுவாசம் அடங்கினால் மனசு அடங்கும்; மனசு அடங்கினால் சுவாசம் அடங்கும் என்று இதிலிருந்து தெரிகிறது. விதிப்படி யோகாப்பியாசம் பண்ணி மூச்சை அடக்கி அதனால் மனசை அடக்கச் சொல்வதன் நியாயம் இதிலிருந்து புரியும்.



இப்படியே உள்ளத்தில் துக்கமோ பக்தியோ அதிகமானால் கண்ணால் ஜலம் வழிகிறது. மனசுக்கும் கண்ணுக்கும் சம்பந்தம் இருப்பது இதிலிருந்து தெரிகிறது. கோபம் வந்தால் உதடு துடிக்கிறது; மனசுக்கும் உதட்டுக்கும் சம்பந்தம் இருப்பதால். இப்படியே கண் சிவப்பது, கைகால் ஆடுவது எல்லாம் மனசின் ஓட்டத்தைப் பொறுத்து நடக்கின்றன.

அதாவது உள்ளே ஏற்படுகிற உணர்ச்சிக்கு ஏற்ப வெளியே சில காரியங்கள் ஏற்படுகின்றன. இதையே திருப்பி வைத்து 'வெளியே சில காரியங்களைச் செய்தால் அதனால் உள்ளே இன்னின்ன விளைவை உண்டாக்கிக் கொள்ளலாம்' என்று பெரியவர்கள் கண்டுபிடித்துள்ளார்கள். மிலிடரிக்காரன் 'யூனிபாரம் போட்டாலே வீரத் தன்மை வருகிறது' என்கிறானல்லவா? அப்படியே பக்தி வரவேண்டும், சாந்தம் வரவேண்டும், சத்தியம் வரவேண்டும் என்றால் வெளியே சில சின்னங்களைப் போட்டுக் கொள்ள வேண்டும் என்று நம் பெரியோர்கள் சொன்னார்கள்.

வெளியில் நாம் செய்கிற சில சம்ஸ்காரங்களினால் உள்ளே சில நன்மைகள் உண்டாகின்றன. இவை எல்லாம் வெளி வேஷம் என்று நினைத்தால் வெறும் வேஷமாகவே போய்விடுகின்றன. 'ஆத்மார்த்தமாக, ஜீவனைப் பரிசுத்தம் செய்து கொள்வதற்காக, இந்தச் சின்னங்களை அணிகிறேன்' என்று நினைத்தால் சத்தியமாக உள்ளே பரிசுத்தம் ஏற்படுகிறது. புறச் சின்னங்கள் ஆத்மாவுக்கு உபயோகப்படுகின்றன.

நான் மடாதிபதி. இந்த வேஷம், விபூதி, ருத்ராக்ஷம் போட்டால்தான் பணம் கொடுப்பீர்கள். இல்லாவிட்டால் மாட்டீர்கள். உங்களுக்கு அப்படியில்லை. வேறு எந்த வழியிலிருந்தோ பணம் வருகிறது. எனவே, ஆத்மார்த்தத்துக்காகவே நீங்கள் இந்தச் சின்னங்களைத் தரித்துப் பயன் அடையலாம்.

இருந்து வருகிறது. இதை நீடித்துவிட்டனர் முதன்மந்திரிமார்கள். இது ஒருபுறமிருக்க, ராஜ்யங்களுக்குள்ளேனும் இவ்விதத் தடைகளின்றி மாவட்டத்துக்கு மாவட்டம் சுதந்திரமாக உணவுப் பொருள்கள் பரிவர்த்தனை யானால் நலமா யிருக்கும். ஆனால் இது ஈடேறும் என்பதற்கு எத்தகைய அறிகுறியும் காணாதது நம் துரதிருஷ்டமே.

சிவசேனை இயக்கத்தைப் பொருட்படுத்தாமல் தமிழ்க் கடவுளாம் முருகப் பெருமான் பம்பாயில் கோயில் கொள்ளத் தீர்மானித்திருக்கிறான். மாதுங்கா ஜோதி மன்றத்தினர் முருகன் கோயிற் பணியில் முனைந்து ஈடுபட்டுள்ளனர். இதற்குத் திரவியம் சேகரிப்பதற்காக அருள்மொழி அரசாகிய நமது திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் அக்டோபர் 15ந் முதல் 24ந் தேதி முடிய மாதுங்கா இந்தியன் ஜிம்கானா மைதானத்தில் பெரிய புராணமும், 25லிருந்து 30ந் தேதி முடிய செம்பூர் காந்தி மைதானத்தில் திருவிளையாடல் புராணமும் உபந்நியாசம் செய்கிறார்கள். பம்பாய் அன்பர்கள் தெய்வமாக் கதைகளைக் கேட்டுப் பயன் பெற்று, கோலக் குமரனுக்கொரு கோயிலெழும்பவும் கைங்கரியம் புரிவார்களாக!

தேவிக்கு மிகவும் உகந்த நவராத்திரித் திருநாட்களையொட்டி ஸ்ரீ காஞ்சி காமாட்சியம்பாளுக்கு உற்சவம் நடைபெற்று வருகிறது. இதில் லட்சார்ச்சனையும் ஓர் அங்கம். கருணையே உருவான காமகோடியின் கிருபையைப் பெற விரும்பும் அன்பர்கள் 'ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் தேவஸ்தானம், காஞ்சிபுரம்' என்ற விலாசத்துக்கு மணியார்டரில் ஏழு ரூபாய் அனுப்பி வைத்து, தங்கள் பெயர், கோத்திரம், நட்சத்திரம், அர்ச்சனை செய்ய வேண்டிய தினம் முதலியவற்றைத் தெரிவித்தால் தேவிக்கு சஹஸ்ரநாமம் செய்து பிரசாதம் அனுப்பப்படும்.

# மகா சந்நிதானத்தின் மறைவு

திருவாவடுதுறை ஆதீனத்தின் இருபத்தோராவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி யிருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் செப்டம்பர் மாதம் 23ந் தேதி பரிபூரணம் அடைந்தார்கள். பதினேழு ஆண்டுகள் திருவாவடுதுறை ஆதீனத்தின் தலைவராக இருந்த இந்தச் சுவாமிகள், தமது ஆட்சிக் காலத்தில் ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகத்தை நிலையாக விரிவு செய்ததோடு நிரந்தரமான இலக்கியச் சிறப்புள்ள அமர நூல்கள் பலவற்றை வெளியிட்டு அருந்தொண்டு செய்திருக்கிறார்கள்.

விநாயகப் பெருமான், முருகன், நடராஜர் வழிபாடு பற்றிய சகல அம்சங்களும் அடங்கிய தனித்தனி நூல்களை இவர்கள் வெளியிட்டுள்ளார்கள். 'திருவாசகம்' முழுதும் உரையோடு ஒரு பெரும் பதிப்பாக வந்திருக்கிறது. சிறு சிறு நூல்களும், புராணங்களுமோ ஏராளம். இந்த நூல்களை யெல்லாம் பெரும்பாலும் இலவசமாகவே வழங்கி வந்திருக்கிறார்கள். ஆண்டுதோறும் திருமூல மகா முனிவருடைய நாளைச் சிறப்பாகக் கொண்டாடி, திருமந்திர மகாநாடு கூட்டி, 'பஞ்சாக்ஷர தீபம்' என்னும் விரிவுரையையும் எழுதுவித்துத் தமிழ்நாட்டிலே இக்காலத்தில் திருமந்திர உணர்வுக்கு ஒரு மறுமலர்ச்சி உண்டாக்கிய பெருமையும் இந்த அடிகளைச் சாரும். தஞ்சையிலுள்ள கதாகாலட்சேபக் கல்லூரியைப் போலவே பல பொதுப் பணிகளுக்கும், அறப் பணிகளுக்கும், வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியாத வகையில் மிகவும் விசாலமான உள்ளத்தோடு எத்தனையோ நன்கொடைகள் பல்லாயிரக் கணக்கில் வழங்கியிருக்கிறார்கள் இந்த மகாசந்நிதானம் அவர்கள்! அவர்களுடைய பெருந்தன்மையும், பரிவோடு கூடிய பெரிய ஈகையும் ஒப்பற்றவை.

ஆடம்பரமோ, புகழோ எதையும் விரும்பி நாடாமல் அமைதியான முறையில் வாழ்ந்து ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் ஜீவசமாதி ஸ்தலமாகிய திருவாவடுதுறையிலேயே தாமும் பரிபூரணம் அடைந்து விட்டார்கள் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியர் அவர்கள். தம்முடைய மறைவுக்கு மூன்று தினங்களுக்கு முன்பு பெரிய பூஜை ஒடுக்கம் சுவாமிகளை அழைத்துத் தமக்குரிய இளவரசாக்கி,



'அம்பலவாண தேசிகர்' என்ற தீக்ஷா நாமமும் கொடுத்து ஞானபிஷேகம் செய்தார்கள். அவரது அடியொற்றி, தமிழும் சைவமும் தழைப்பதற்குப் புதிய மகாசந்நிதானம் அவர்கள் எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளுவார்கள் என்று நம்புகிறோம்!

# ராஜாஜியின் கருத்துக்கள்

அரசாங்கம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய எந்தத் துறையை எடுத்தாலும் அதில் ஒழுங்கீனத்தையே காண்கிறோம். நமது பிரதமர் அவர்கள் இலங்கைப் பிரதமருடன் உலகப் பிரச்னைகளை விவாதித்தாலோ, மொரார்ஜி தேசாய் இங்கிலீஷ்காரர்களை ஐரோப்பியப் பொதுச் சந்தையில் சேரும்படி உபதேசித்ததாலோ நமது உள்நாட்டுப் பிரச்னைகள் சிறிதேனும் திருந்தியதாகப் பொருளாகாது. தேசப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குக் குந்தகமாக எங்கும் நேர்மையின்மை பரவியிருப்பது மிகவும் துரதிர்ஷ்டமாகும். இப்போது அவரவரும் நேர்மையை மீண்டும் பெறுவதே அவசியம். தனிமனிதனின் தூய்மைக்காகப் பாடுபடும் எந்த ஸ்தாபனமும் இப்போது நாட்டு வாழ்வு முன்னேறுவதற்கு அவசியமாகும்.

ஃஃஃ

தமிழ் நாடு முழுவதிலும் முதன் மந்திரி திரு அண்ணாதுரை அவர்களின் பிறந்த தினம் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டிருக்கிறது. அவருக்கு என் ஆசியும் பாராட்டும் தெரிவித்துக் கொள்கிறேன். அவர் தமிழ் நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட நாளாக ஒற்றுமை, நேர்மை, நம்பிக்கை இவற்றில் ராஜ்ய மக்களிடையே ஒரு புது சகாப்தம் ஏற்பட்டுள்ளது. முக்கியமாக, ஆங்கிலம் நீடிக்க வேண்டும் என்பதில் அவர் காட்டும் உறுதிப்பாடும், கள்ளுக் கடைகளைத் திறப்பதே இல்லை என்பதில் அவர் கொண்டுள்ள அழுத்தமும் நம்பிக்கை ஊட்டுகின்றன. ஒரு மாயத்துக்கு ஆட்பட்டு மதுப் பெர்மிட் வாங்கிக் கொண்டு தங்கள் வாழ்வையே அழித்துக் கொள்ளச் சிலர் விரும்பினால் அவர்கள் அப்படியே செய்து விட்டுப் போகலாம். ஆனால் கள்ளுக் கடைகளைத் திறந்து எல்லா ஏழை மக்களையும் இந்த ஒரு சிலரின் பொருட்டு அழிப்பதற்கில்லையல்லவா?

ஃஃஃ

நாதுலாவில் இந்தியாவுக்கும் சீனத்துக்கும் ஏற்பட்ட மோதலைப் பற்றிப் பொதுமக்களுக்குப் போதிய தகவல் அளிக்கப்படவில்லை என்றே தோன்றுகிறது. ஸிக்கிமும், அதனால் இந்தியாவும் சில பகுதிகளைச் சீனத்திடம் இழந்து விடுமோ என அஞ்சுகிறேன். என் அச்சம் ஆதாரமற்றுப் போக வேண்டும் என்றும் ஆசைப்படுகிறேன்.

சீனத்தில் ஒரு கட்டுப்பாட்டுடன் குழப்பத்தை உண்டாக்கி வருவதாக அமெரிக்கப் பத்திரிகைகள் கூறுகின்றன. மக்களின் கவனத்தை இதிலிருந்து திருப்பும் பொருட்டு ஸிக்கிமில் மாவ் தொடங்கிய விவகாரம் எதிர்பார்த்த பலனைத் தரவில்லை என்பது அமெரிக்காவின் கருத்து. இந்தியாவிலோ உயர் கல்வி விஷயத்தில் கட்டுப்பாடற்ற குழப்பமே ஏற்பட்டிருக்கிறது. பொருளாதாரத்தில் ஓரளவு கட்டுப்பாட்டுடன் குழப்பம் உண்டாக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் செலவைக் கட்டுப்படுத்தாமலே விலைவாசிகளைக் கட்டுப்படுத்த நினைப்பதும், வர்த்தகத் துறையினரைக் கொடுமைப்படுத்துவதன் மூலம் ஊதியங்களைச் சரி செய்து விடலாம் என்று எண்ணுவதும் அரசாங்கத்தின் பலவீனத்தையே காட்டுகின்றன.

ஃஃஃ

வைத்தியக் கல்லூரி அட்மிஷன் கேஸை உயர்நீதி மன்றம் பைசல் செய்து விட்டது. தேர்வுக் கமிட்டி அனுப்பி வைத்த பட்டியலை ஒரு மாறுதல்கூட இன்றி முதன்மந்திரி அங்கீகரித்துத் திருப்பிவிட்டார் என்பதை எடுத்துக் காட்டி, அக்கமிட்டித் தலைவர் திரு என். சோமசுந்தரம் ஹைகோர்ட்டில் ஒரு பிரமாண வாக்குமூலம் தாக்கல் செய்துள்ளார். அட்மிஷன்களில் அரசாங்கம் தலையிட்டது என்ற ஆதாரமற்ற சந்தேகத்தை இது தீர்க்கும்.

பி.யு.ஸி. பரீட்சையில் 'டி-ப்ளஸ்' வாங்கியவர்களில் முப்பதுக்கு மேற்பட்டவர்கள் வைத்தியக் கல்லூரிப் பேட்டியின் போது, பி. யு. ஸி. பரீட்சை வினாத் தாள்களில் இருந்த கேள்விகளுக்கே விடை சொல்ல முடியாமலிருந்ததைத் திரு சோமசுந்தரம் கண்டிருக்கிறார். சர்வகலாசாலைப் பரீட்சையில் வாங்கிய சிறப்பு மார்க் ஒரு மதிப்பும் இல்லாமற் போய்விடுமளவுக்கு ஊழல் பரவியுள்ளது!

சமையலில் உப்புக் குறைந்தால் உப்புப் போடலாம். உப்புக்கே அதன் கார்ப்புத் தன்மை குறைந்துவிட்டால் எங்கிருந்து அதைக் கொண்டு சேர்க்க முடியும்? பொது வாழ்வின் ஊழல்களுக்குக் கல்வியாளரிடமிருந்து தீர்வை எதிர்பார்க்கிறோம். கல்வித் துறையிலேயே ஊழல் எனில்....? பணத்தினாலோ, அரசியல் செல்வாக்காலோ, ஜாதியைக் கொண்டோ சர்வகலாசாலைப் பரீட்சை முடிவுகளில் குறுக்கிடுவதைத் தடுத்தேயாக வேண்டும். தொழிற் கல்லூரிகளில் ஏற்பட்டுள்ள இட நெரிசல் காரணமாக இத்தகைய ஒழுங்கீனங்கள் ஏற்பட்டுள்ளன. தகுதிக்கும், பிற்பட்டவர்களுக்குச் சட்டப்படித் தரப்படும் சலுகைகளுக்கும் மீறிக் காரியங்கள் செய்யப்படுகின்றன.

ஃஃஃ

இந்திய சர்வகலாசாலைகள் ஒரு குடும்பமாக உள்ள இன்றைய அமைப்பைச் சிதைத்து அவற்றில் ஒவ்வொன்றைச் சுற்றியும் பிரதேச மொழி என்கிற மதிலை எழுப்பிப் பிரிவினை செய்கிற மடைமையை — சூழ்ச்சியை — நாம் ஒருகாலும் அனுமதிக்கலாகாது. ''நாங்கள் ஒன்றாகத்தான் இருப்போம். எங்களைத் தனித் தனிச் சுவர்களுக்குள் அடைத்து, ஸையன்ஸ், நுட்பத் தொழில் கல்வி, கலை இவற்றைச் சுக்குநூறாகச் செய்ய அனுமதிக்க மாட்டோம். சர்வதேசத்துக்கும் பொதுவான அடையாளங்களையும், சொற்றொடர்களையும் சர்வதேச மொழியையும் விடமாட்டோம். உலகத்தின் அறிவு வளருகின்ற அதே வேகத்தில் இந்திய அறிவும் வளர விட வேண்டும்'' — என்று சர்வகலாசாலைகள் உறுதியாகப் பிரகடனம் செய்ய வேண்டும்.

# இளமேனியருக்கு இணங்கிய உறவு பியர்ஸ்...















இப்போது, புதிய புள்ளிக்கோல மேலுறையோடு உமக்கே!

## மென்மை கொஞ்சும் தூய கிளிசரின் சோப்

பச்சிள மேனிக்கும் இணங்கிய மென்மையுள்ளது பியர்ஸ். வரளவிடாமல் உங்கள் சருமத்தை இளங்கொழுந்து போல் புதுமையோடு போற்றுவது பியர்ஸ் சோப்பிலுள்ள கிளிசரின். தூய்மையானது பியர்ஸ்...மாணிக்கம் போல் படிகத் தன்மை படைத்தது உங்கள் மேனிமீது இளமை கொஞ்சிடவே : பியர்ஸ்

**தன் தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ்**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-PS, 158-140 TM

# அங்கும் இங்கும்

க. சந்தானம்

இயற்கையாலும் சரித்திரத்தாலும் பல வேற்றுமைகள் உள்ள பிரதேசங்கள் ஓர் ஐக்கிய அரசாங்கத்தின் கீழ் இருப்பதால் இரண்டு பெரிய லாபங்களை அடைகின்றன. இப்பிரதேசங்களுக்குள் அமைதியை நிலை நிறுத்தி வெளியிலிருந்து வரும் ஆக்கிரமிப்புக்களைத் தடுப்பது சுலபமாகின்றது. பொருள்களும், பலவிதத் தொழில் நிபுணர்களும், தொழிலாளிகளும் ஐக்கிய தேசத்தின் எல்லாப் பாகங்களுக்கும் தடையின்றிச் செல்வதால் பொருளாதார வளர்ச்சி எளிதாகின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளும், சோவியத் ருஷியாவும் பொருளாதாரத்தில் முன்னணியில் இருப்பதற்கு அவை பரந்த நாடுகளாகவிருந்தும் ஒரே அரசாங்கத்தின் கீழ் இருப்பதே முக்கியக் காரணமாகும்.

விஞ்ஞானத்திலும் தொழில் திறமையிலும் ஜெர்மனி, இத்தாலி, பிரான்சு போன்ற ஐரோப்பிய நாடுகள் உலகிலேயே சிறந்து விளங்குகின்றன. ஆனால் அவை தனி அரசாகப் பிளவுபட்டிருப்பதால் போதிய அளவு பொருளாதாரத்தில் முன்னேற முடியவில்லை. இக்குறையைத் தீர்க்க மேற்கூறிய நாடுகளும் மற்றும் மூன்று சிறிய தேசங்களும் ஒன்று சேர்ந்து ஐரோப்பியப் பொருளாதார சமுதாயம் என்ற ஒரு கூட்டு ஸ்தாபனத்தை ஏற்படுத்தியிருக்கின்றன. அதன் முக்கிய நோக்கங்கள் இந்நாடுகளுக்கிடையே பண்டங்களும் தொழிலாளிகளும் தடையின்றிச் செல்ல வேண்டும், பொருளாதார முன்னேற்றத்தின் லாபத்தை எல்லா நாடுகளும் தமது திறமைக்கும் உழைப்புக்கும் ஏற்றபடி பங்கிட்டு செய்து கொள்ள வேண்டும் என்பனவேயாகும். இந்த ஸ்தாபனம் உருவானபின் அதில் சேர்ந்த நாடுகள் தீவிரமாக வளர்ச்சியடைந்து இப்பொழுது அமெரிக்க ஐக்கிய நாட்டுக்குச் சமானமாகவும் போட்டியாகவும் பொருளாதார வல்லமை பெற்று வருகின்றன. இதில் தானும் சேர்ந்துகொள்ள வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் சென்ற சில ஆண்டுகளாக முயற்சி செய்து வருகின்றது. ஆனால் பிரிட்டனைச் சேர்த்துக் கொண்டால் அதனைச் சேர்ந்த சாம்ராஜ்ய நாடுகளுக்கு விசேஷச் சலுகைகள் அளிக்க வேண்டும்; அதனால் ஐரோப்பிய சமுதாயத்துக்கு இடைஞ்சல் ஏற்படும் என்று பிரெஞ்சு அதிபர் டிகால் எதிர்த்து வருகிறார்.

இவ்வாறு தனி அரசுகள் ஒன்று கூடி வரும் பொழுது, அதிர்ஷ்டவசமாக ஓர் அரசாங்கத்துக்குள் இருக்கும் நமது பாரதத்தைப் பொருளாதாரத் துறையில் சிறு துண்டுகளாகச் செய்து ராஜ்யங்களுக்குள் போட்டியும் மனஸ்தாபமும் உண்டாக்கிப் பொருளாதார வளர்ச்சிக்கு நமது மத்திய சர்க்கார் பெரும் கேடு விளைவித்திருப்பது மிகவும் வருந்தத் தக்கதே. நமது அரசியல் சாஸனத்தில் வியாபாரமும், தொழில் தொடர்புகளும் நாடெங்கும் தடையில்லாமல் நடைபெற வேண்டியதன் அவசியம் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. 301வது விதியில் ''பின்வரும் விளக்கங்களுக்குட்பட்டு, வியாபாரமும் தொடர்பும் பாரதத்தின் எல்லைக்குள் சர்வ சுதந்திரமாக இருக்க வேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கிறது. எதிர்பாராத நெருக்கடியைச் சமாளிப்பதற்காக நாட்டின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்தோடு நடைபெறும் வியாபாரத்துக்கும், தொழில் தொடர்புகளுக்கும் சட்டபூர்வமாகத் தடை விதிக்கப் பார்லிமெண்டுக்கு அதிகாரமளிக்கப்பட்டிருக்கிறது. ராஜ்யங்களுக்கு இத்துறையில் சொந்த அதிகாரம் சிறிதுமில்லை. ஆனால் அவசியப் பொருள்களைக் கட்டுப்படுத்துவதற்காக பார்லிமெண்டால் ஒரு சட்டம் இயற்றப்பட்டு அதன்மூலம் வியாபாரத்துக்கும் தொழிலுக்கும் பலவிதமான நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சில கட்டுப்பாடுகள் மத்திய அரசாங்கத்தால் நேரடியாகவே தனது இலாகா மூலம் அமுல் செய்யப்படுகின்றன. மற்றும் சில ராஜ்ய அரசாங்கங்கள் மூலம் நிர்வகிக்கப்படுகின்றன. பெரும்பாலும் உணவு தானியங்கள், விவசாயப் பொருள்கள் போன்ற பண்டங்களின் போக்கு வரத்துக்களை ராஜ்ய அரசாங்கங்களே பல வருஷங்கள் கட்டுப்படுத்தி வந்திருப்பதால் இந்த அதிகாரங்கள் தங்களுக்குச் சொந்தமென்றே எண்ணுகின்றன. இதனால் ஒரு பாகத்தில் மக்களுக்கு கோதுமை, அரிசி, பருப்பு, எண்ணெய் முதலிய பொருள்கள் தாராளமாகவும் சுமாரான விலைக்கும் கிடைக்கின்றன. மற்ற பாகங்களில் கிடைக்காமலும் அதிக விலையுள்ளனவாகவும் இருக்கின்றன. எல்லோருக்கும் சமமான பிரஜா உரிமைகள் கிடைக்க வேண்டுமென்ற தத்துவம் நடைமுறையில் பொய்யாக்கப்பட்டு விட்டது.

எல்லாப் பொருள்களையும் ராஜ்ய அரசாங்கங்கள் தங்களிஷ்டப்படி கட்டுப்படுத்தலாம் என்றிருந்தால் அதன் மூலம் ஒற்றுமை குலைந்தாலும் ஒருவித நியாயமும், சம உரிமையும் ஏற்படக்கூடும். கேரள அரசாங்கம் தனது தேங்காய், மிளகு, ஏலம் பாக்கு போன்ற பொருள்களைக் கொண்டு பேரம் செய்து மற்ற ராஜ்யங்களிடமிருந்தோ வெளி நாடுகளிலிருந்தோ அரிசியை வாங்கிக் கொள்ளக் கூடும். ஆனால் அப்பொருள்கள் பாரதத்துக்குப் பொதுவானவை, அரிசியும் கோதுமையும் விளையும் ராஜ்யத்தைச் சேர்ந்தவை என்ற ஏற்பாடு மிகவும் அநியாயமென்பதை யாரும் மறுக்க முடியாது.

இதன் பயனாக ஒவ்வொரு ராஜ்யமும் தனது எல்லைக்குள் நிறுவப்படும் தொழிற்சாலைகளை தனக்குச் சொந்தமாகப் பாவித்துப் போட்டி போடுகின்றன.

இக் கட்டுரையில் அரசாங்கம் சொந்தமாக உற்பத்தியிலும் வியாபாரத்திலும் தலையிடவேண்டுமா அல்லது பொருளாதார மனைத்தையும் தனியார் துறையிடம் விட்டுவிடவேண்டுமா என்ற பிரச்னையை நான்

ஆராய விரும்பவில்லை. ஆனால் எவர் உற்பத்தி செய்தாலும், வியாபாரம் செய்தாலும் அதில் பாரத மக்களனைவருக்கும் சமமான உரிமை இருக்க வேண்டும்; அப்பொருளைப் பெறுவதற்கோ அத் தொழில்களில் பணி புரிவதற்கோ எல்லா இந்தியர்களுக்கும் ஒரேவித பாத்தியம் இருக்க வேண்டும் என்பதையே வற்புறுத்துகிறேன்.

போதுமான உற்பத்தி இல்லாதபோது, முதலாளிகளும் வியாபாரிகளும் சரக்குகளைச் சேகரித்து வைத்து அநியாய விலைக்கு விற்றுக் கொள்ளையடிப்பார்கள், அதை அரசாங்கம் தடுக்க வேண்டும் என்று வாதிப்பதில் ஓரளவு உண்மை இருக்கிறது. ஆனால் பாரதம் முழுவதும் ஓர் பொதுச் சந்தையாக இருந்தால் எவ்வித வியாபாரத்திலும் பல வியாபாரிகள் போட்டியிடுவது நிச்சயம். எந்த வியாபாரியும் சரக்குகளை நீண்ட காலத்துக்குத் தேக்கி வைத்துத் தனது முதலை அதில் முடக்கிவிட்டு வட்டியை இழந்தோ, சரக்குகள் கெட்டுப்போவதால் உள்ள நஷ்டத்தை ஏற்றோ வியாபாரம் செய்ய விரும்பமாட்டான். அப்படிச் செய்வோருக்கு பாங்குகள் கடன் கொடுப்பதை கட்டுப்படுத்த அரசாங்கத்துக்கும் ரிசர்வ் பாங்குக்கும் போதிய அதிகாரங்கள் இருக்கின்றன.

உண்மையில் அரசாங்கங்கள் வியாபாரத்தில் புகுந்த பின் சரக்குகளின் தேக்கமும், சேதமும் பன்மடங்கு அதிகரிக்கின்றன. அவற்றால் ஏற்படும் நஷ்டங்களுக்கு பொறுப்பாளிகள் இல்லை. வரிகளின் மூலம் நஷ்டத்துக்கு மக்களே ஈடுசெய்ய வேண்டியிருக்கிறது.





○ திருச்சி மாவட்டம், மணக்காலில் உள்ள யஜுர்வேத பாடசாலையின் 73-ம் ஆண்டு விழாவில், இப்பாடசாலையில் 43 ஆண்டுகளாக அத்தியாபகராகச் சிறப்புப் பணி புரிந்துள்ள பிரம்மஸ்ரீ மகாலிங்க கனபாடிகளுக்குப் பாராட்டு வழங்கப்பட்டது. முன்னாள் நீதிபதி ஸ்ரீ எல். எஸ். பார்த்தசாரதி அய்யர் தலைமை தாங்கினார். கனபாடிகளுக்கு ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்கள் காமாக்ஷி உருவம் பதித்த பொற் காசுமாலை அநுக்கிரகித்திருந்தார்.

○ யூனியன் கார்பைட் ஊழியர்கள் பொழுது போக்குச் சங்கத்தின் மூன்றாவது ஆண்டு விழா சமீபத்தில் அண்ணாமலை மன்றத்தில் நடந்தது. அப்போது பீஹார் பஞ்சநிவாரண நிதிக்கு ரூ. 2001-ம், சென்னைத் தீவிபத்து நிதிக்கு ரூ. 1001-ம் நன்கொடை அளிக்கப்பட்டது.

○ பிரதமர் இந்திரா காந்தி கொழும்பு சென்றிருக்கையில் செட்டியார் வர்த்தக சங்கத் தலைவர் திரு ஆர். எம். பழனியப்பன் அவருக்கு வரவேற்பு உபசரணை நல்கினார். பிரதமருக்குப் பின்புறம் இலங்கை இந்திய நட்புறவுச் சங்கத் தலைவர் திரு ஏ. ரெட் நாயகாவும் அவரது மனைவியாரும்.





அவசியமானபொழுது மத்திய, ராஜ்ய அரசாங்கங்கள் வியாபாரிகள் போலவே தானியங்களையும் மற்ற சரக்குகளையும் வாங்கி விற்பனை செய்து கூடுமானால் லாபம் சம்பாதிக்கட்டும். ஆனால் சட்டத்தின் பலத்தைக் கொண்டு அரசாங்கம் ஏகபோக உரிமைகள் பெற்றுத் தொழில், வியாபாரம் செய்வதால் நஷ்டமேற்படுவது நிச்சயம். இந்தியாவின் ஒற்றுமை குலைவது அதைவிடப் பெரிய தீமை.

நாட்டின் நலத்துக்காக ஏதாவது கட்டுப்பாடுகள் தேவையானால் அவைகளை மத்திய அரசாங்கமே தனது சேவகர்களைக் கொண்டு நிர்வகிக்க வேண்டும். அதில் ஏதாவது பட்சபாதம் காட்டப்பட்டால் பார்லிமெண்டில் பெரும் கூச்சல் எழும். கட்டுப்பாடுகளை ராஜ்ய அரசாங்கங்களுக்கு விட்டுவிட்டால் மந்திரி சபையும், சட்டசபையும் சேர்ந்து தமது ராஜ்யத்தின் நலத்துக்காக பாரதத்தின் பொதுநலத்தைப் புறக்கணிக்கக் கூடும்.

நமது நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பாரதம் அனைத்தும் ஓர் பொதுச் சந்தையாக இருப்பது இன்றியமையாதது. அதற்குப் பங்கம் விளைவிக்கும் எவ்விதக் கட்டுப்பாடுகளும், நியமங்களும் சில சமயங்களில் குறிப்பிட்ட பிரதேசங்களுக்குச் சிறிதளவு பயன்படக் கூடியதாயினும், முடிவில் அவ்விடங்களுக்கே தீமை விளைவிக்கும். ஆதலால் பாரத அரசாங்கம் நாட்டின் ஒற்றுமையைக் குலைக்கும் தடைகளையும் நிபந்தனைகளையும் நீக்கிப் பொருளாதார வளர்ச்சிக்கு உதவ வேண்டும்.

---



☐ சமீபத்தில் குரோம்பேட்டை நேரு நகரில் ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோவிலில் உத்ஸவ விநாயக மூர்த்திப் பிரதிஷ்டையும் மகா கும்பாபிஷேகமும் சிறப்பாக நடைபெற்றன.



☐ காசநோய் ஆராய்ச்சிக்காக அமெரிக்க சர்க்காரின் மானியமான 3,85,000 ரூபாயில் முதல் தவணையை அமெரிக்க தூதர் மனைவி ஸ்ரீமதி பௌல்ஸ் அம்மையார் வல்லப பாய் படேல் மருத்துவ நிலைய டைரக்டரிடம் வழங்கினார்.



☐ கோவை கல்கரல் அசோஸியேஷனின் ஆறாவது ஆண்டு விழாவில் வீணை வித்வான் ஸ்ரீ சிட்டிபாபுவுக்கு ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் பொன்னாடை அணிவித்து 'வீணாகானப்ரவீணா' என்ற பட்டம் சூட்டினார்.

# தனிச் சிறப்புக் கொண்ட லிப்கோ வெளியீடுகள்!

1967-68ல்
“குரு சஞ்சாரத்தால்
ஏற்படும் பலன்”

எல்லா ராசிகளுக்கும்
நக்ஷத்திரங்களுக்கும்

80 காசு ; தபாலில் ரூ. 1.55

---

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்
(நாமாவளியுடன்)—மூலம்
ஸம்ஸ்க்ருதம் ரூ. 1.25
,, தமிழ் ரூ. 0.80

ஸ்ரீ தேசிக ஸ்தோத்ர நிதி
தமிழில் ரூ. 3.00

ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் ரூ. 2.60

IN ENGLISH

## YOUR LIFE & FORTUNE

based on
JANMA RASI & LAGNA
by
Prof. N. R. Tiruvenkatacharya

Rs. 2.75 ; By Post Rs. 3.60

---

ஸகல கார்ய ஸித்தியும்
ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்-
ஸ்தோத்ரமாலையுடன் ரூ. 3.75

தசாபுக்திகளும் ஸ்ரீமத்
ராமாயண பாராயணமும்
ஸ்தோத்ரமாலையுடன்
ஒவ்வொரு தசைக்கும் ரூ. 2.00

உலகப் புகழ்
எர்ல் ஸ்டான்லி கார்ட்னரின்
அற்புதப் படைப்பான

## பெரிமேஸன்

துப்பறிந்த பரபரப்பூட்டும் கதைகள் முதன்முதலாகத் தமிழில்

1. இரட்டைக் கொலை வழக்கு ரூ. 1.75
2. நடுநிசி வந்த டைப்பிஸ்ட் நங்கை ரூ. 1.75
3. காணாமல் போன பணம் ரூ. 1.75
4. சதியில் சிக்கிய சுந்தரப் பெண் ரூ. 2.00

---

குடித்தனப் பாங்கு - ஸ்ரீமதி
பிருந்தா வரதராஜன் ரூ. 2.00

குழந்தை வளர்ப்புக் கலை-ஸ்ரீமதி
ரங்கநாயகி ரங்கராஜன் ரூ. 2.60

இயற்கை தரும் இன்மருந்துகள்
ஸ்ரீமதி T.S. ஜனககுமாரி ரூ. 4.00

பதிப்பகத்தார்



## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை-17

எல்லா ஹிக்கின்பாதம்ஸ், சுதேசமித்திரன் ரெயில்வே ஸ்டால்களிலும் கிடைக்கும்.

---

# நவராத்திரி விசேஷ விற்பனை!

## உயர் ரக பட்டுச் சேலைகள், பாவாடைகள்

மற்றும் நூல் & மில் ஜவுளிகளுக்கு

# P B லக்ஷ்மணஸா & பிரதர்ஸ்

( ஏர் - கண்டிஷண்ட் )

பனகல் பார்க், தி. நகர், சென்னை-17 போன் : 443435
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2 . . . . போன் : 86966

O❊O

எமது தீபாவளி புதிய கலர்கள் :

லக்ஷ்மண் ❊ சரவணன் ❊ சீதா

நமது ஸ்பெஷல் புதிய பார்டர்கள் : காசி ❊ சங்கமம்



## ராஜாத்தி

ராஜாத்தி மிகவும் துணிச்சல்காரி. அவள்தந்தை ஒரு நாட்டு வைத்தியர்; மகளை வீராங்கனையாக வளர்த்தார். அவளுக்குச் சிலம்பமும் பயிற்றுவித்தார். அது எவ்வளவு நல்லதாய்ப் போய்விட்டது! படத்தின் திரைக் கதையையே வீரமும், மர்மமும், கோரமும் செறிந்த கதையாகச் செய்து விட்டதே!

உதயசந்திரிகாதான் ராஜாத்தி! முரட்டுப் பெண் பாத்திரத்துக்கு ஏற்ற முகந்தான்.

நாட்டு வைத்தியராக வரும் சுப்பையா எல்லாக் கட்டங்களிலும் நன்றாக நடிக்கிறார். சுந்தரராஜன் வில்லன். பாத்திரத்துக்கேற்ற மிரட்டல், உருட்டல்களுக்குக் குறைவில்லை. மனோரமாவும் வி. கே. ராமசாமியும் நாயர் தம்பதியாக வந்து நன்றாய் நடித்திருக்கின்றனர். கணவன் இறந்தது கேட்டு அழும் மனோரமாவின் நடிப்பு அருமையா யிருக்கிறது.

வெகு நாட்களுக்குப் பிறகு தங்கவேலுவைப் படத்தில் பார்ப்பது மகிழ்ச்சி அளிக்கிறது. அவர் நடிப்பும் திருப்தியளிக்கிறது.

முத்துராமன் கதாநாயகன்; இரகசியப் போலீஸ் அதிகாரி. கதாநாயகியோடு ஆடிப் பாடுகிறார்; புல்லாங்குழல் ஊதி மகிழ்கிறார்; இடையில் கொஞ்சம் துப்பும் துலக்குகிறார்!

இந்தப் படத்தில் படுகொலைகள் பல நடந்துவிடுகின்றன. வழக்கம்போல மர்மங்கள் கடைசியில் வெளியாகின்றன. இத்தனை மர்மக் கொலைகளைத் துணிந்து புகுத்திய படத் தயாரிப்பாளர்கள் படத்தில் வரும் மூன்று பாடல்களையும் வெட்டியிருந்தால் ரசிகர்கள் பெரிதும் மகிழ்ந்திருப்பார்கள். படங்களில் ராஜாக்கள் மட்டும் வரலாம், "ராஜாத்தி" வரக்கூடாதோ! அவள் வரத்தான் வருவாள்! நீங்கள் பார்த்தாலும் சரி, பார்க்கா விட்டாலும் சரி!

## பல்லவச் செல்வங்கள்



என். டி. ராம ராவ், நடிகையர் திலகம் சாவித்திரி, தேவிகா, நாகையா ஆகியவர்கள் நடித்துத் தெலுங்கில் வெளிவந்து சக்கைப்போடு போட்ட படத்தின் தமிழாக்கம் இது.

அரியணை ஏறவேண்டிய அரச குமாரனும், அரண்மனை அந்தப்புரத்தில் இருக்க வேண்டிய அரசியும், ஆரண்யத்தில் அவதியுற, குள்ளநரிக் கும்பல் குதூகலமாய்க் கும்மாளமடிக்கிறது அரண்மனையில். வஞ்சகர் நெஞ்சம் திடுக்கிட, வஞ்சியர் அஞ்சி ஒடுங்கிட, வீரவாலிபன் அரண்மனையில் புகுந்து விடுகிறான். சதித் திட்டம் அம்பலமாகிறது. அவன் போகும் இடங்களிலெல்லாம் வெற்றி அவனுக்குத்தான். (அவன்தான் கதாநாயகனாயிற்றே!)

பலமுறை பார்த்து அலுத்து ஓய்ந்துபோன காட்சிகள்தான் என்றாலும் என். டி. ராமராவ் மிகவும் சுறுசுறுப்பாய் ஓடி ஆடிச் சண்டைக் காட்சிகளில் ஜமாய்க்கிறார்.

தேவிகாவுக்கு அருவியில் குளித்துக் களிக்கவும், ஆடிப் பாடி மகிழவும், மந்திரி குமாரியுடன் குழையவும், காதலனைக் கண்டு நெகிழவும் நிறையச் சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன.

திரை நிறைந்து காணும் நடிகையர் திலகம் நடிப்பிலும் நிறைந்து நிற்கிறார். தம்மை மாய்த்துக் கொள்ளும் கட்டத்தில் நடிப்புக் கலைக்கே உயிர் கொடுக்கிறார்.

எல். விஜயலட்சுமி, காஞ்சனா இருவரும் ஆடும் நடனம் மிகவும் விறு விறுப்பா யிருக்கிறது.

குத்தும், கொலைகளும், காதலும், களியாட்டங்களும் நிறைந்த இப்படத்தில் இயற்கைக் காட்சிகள் மிகவும் நன்றாக இருக்கின்றன.


விடிந்தால் லதாவுக்குப் பிறந்த நாள். பல சிநேகிதிகளுக்கு அழைப்பு அனுப்பியாகிவிட்டது. ஆனால் பத்மாவுக்கு இப்போது ஒரு பெரிய பிரச்னை!
மழை நாள். கிடைக்கும் விறகு ஒரே ஈரம். விலையும் ஏறியபடி இருக்கிறது!


கவலையோடு இருந்த பத்மாவைக் காண வருகிறாள் எதிர் வீட்டு கீதா.
கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கை வைக்க வேண்டாமே, பத்மா! உனக்கு இப்போது என்ன கவலை?
ஒரே கவலைதான் கீதா! சமையல் அடுப்புக்குக் கிடைப்பது பச்சை விறகு தான். அதுவும் ஒரேயடியாக விலையேறியிருக்கிறதே. எப்படி சமாளிக்கப் போகிறேனோ!


பூ! இதற்கா கவலைப் படுகிறாய்! கையிலே வெண்ணெய் வைத்துக் கொண்டு நெய்க்கு அலைகிறாயே. 'லீக்கோ' இருக்கக் கவலை ஏன்?
நானும் 'லீக்கோ'வைப் பற்றி கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால் வாங்கிப் பார்த்ததில்லை.


'லீக்கோ' குறைந்த விலையுள்ளது. அதிசிக்கனமானது, புகையற்ற எரிபொருள். எல்லா ரக கரி அடுப்புக்கும் உகந்தது. சமையலும் சீக்கிரமாக முடிந்து விடும். உன் நாளை விருந்தை 'லீக்கோ'வை வைத்து நடத்திப் பாரேன்.


கீதா, இந்தா இன்னொரு டம்ளர் பாயசம். உன் யோசனைக்கு ரொம்ப நன்றி. எனக்கும் திருப்தி. எல்லாருக்கும் சந்தோஷம். இனி எப்போதும் 'லீக்கோ'வை வாங்கத் தீர்மானித்து விட்டேன்.
FDS NLC 735 TMB


LECO
லீக்கோ
நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,
நெய்வேலி-1

**கா**ப்பி குடிப்பது நல்லதெனில், காப்பியைத் தின்பது அதனிலும் நல்லது. அதில் விநோதமும் உண்டு. என்ன? காப்பியைத் தின்பதாவது ? முடிகிற காரியமா இது ?

முடிகிற காரியம்தான் ஸ்வாமீ! காப்பியை நீங்கள் மொச்சு மொச்சென்று மென்றுகூட உண்ணலாம் என்று பெங்களூரில் உள்ள காப்பி போர்ட் நிரூபித்திருக்கிறது. காப்பி போர்ட் என்பது இந்திய சர்க்காருடைய வர்த்தக மந்திராலயத்தின் ஓர் கிளையாகும்.

ரொட்டி, கேக்கு, சாக்லேட், பிஸ்கெட், மற்றும் பல இனிப்புக்களில் காப்பிச் சாற்றைப் பணிக்கச் சேர்த்து அவற்றுக்குப் புது ருசியும் புதுக் கவர்ச்சியும் ஏற்படுத்தியுள்ளது இந்த போர்டு. காப்பி ஐஸ்கிரீம் இப்போதே பிராபல்யமடைந்து விட்டது. காப்பியில் டாஃபியும், பர்பியும்கூட வெற்றிகரமாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. இந்த இனிப்புக்களுக்குச் சர்க்கரைதான் வேண்டும் என்பதில்லே. சர்க்கரைக்குப் பதில் வெல்லத்தையே கூடப் பயன்படுத்தலாம்.

# 'காப்பி'யம்




வி. பாலு
(அபிவிருத்தி இயக்குநர்,
பெங்களூர் காப்பி போர்ட்)


இந்தத் தின்பண்டங்களே எப்படிச் செய்வது ? இதோ உங்கள் அபிமான உணவுகள் சிலவற்றில் உங்களுக்குப் பழக்கமான காப்பியின் நறுமணத்தைப் பரப்பச் செய்முறைகள்:

## காப்பியில் டாஃபி

### தேவையான பண்டங்கள்:

பால் : 4 தம்ளர், காப்பி டிகாக்ஷன்: 1½ தம்ளர், சர்க்கரை: 2½ தம்ளர், வெண்ணெய்: ½ தம்ளர்.

செய்முறை: மேலே சொன்ன பண்டங்கள் யாவற்றையும் ஒரு கனமான பாத்திரத்தில் இட்டு அடுப்பின் மேல் வைக்கவும். சூடு ஒரே ரீதியில் இருக்கச் செய்து, பாத்திரத்தைக் கிளறிக் கொண்டே கொதிக்கச் செய்யவும். கலவை கெட்டியாகி, சிறுபந்தாக உருவெடுத்து, பாத்திரத்தில் ஒட்டாமல் ஆகிற வரையில் கிளறவும். இந்தப் பதத்தை அடைந்ததும் அதை ஒரு நெய் தடவிய தட்டில் கொட்டவும். குளிர்ந்தபின், வேண்டிய பரிமாணத்துக்குக் கத்தியால் துண்டு போடவும்.

## காப்பி பர்பி

### தேவையான பண்டங்கள்:

தேங்காய்த் துருவல்: 1 தம்ளர், சர்க்கரை: 1½ தம்ளர், காப்பி டிகாக்ஷன்: 1 தம்ளர்,



கிடைக்குமாயின் க்ளூகோஸ்: ½ டேபிள் ஸ்பூன்.

செய்முறை: சர்க்கரையைக் கம்பிப் பதமான பாகாகக் காய்ச்சவும். தேங்காய்த் துருவல், காப்பி டிகாக்ஷன், க்ளூகோஸ் இவற்றைப் பாகில் போட்டு, ஒரே சூட்டில் கிளறவும். கலவை கெட்டிப்பட்டுத் திரண்டு வருகையில் நெய் தடவிய தட்டிலே எடுத்துக் கொட்டி, டயமன்ட் டயமன்டாக வெட்டிக் கொள்ளவும்.

## காப்பி ஜெல்லி

### தேவையான பண்டங்கள்:

காப்பி டிகாக்ஷன்: 7 தம்ளர், சர்க்கரை 3 தம்ளர், ஜெலாடின் 12½ டேபிள் ஸ்பூன்

பாலாடை: 42 அவுன்ஸ், வனிலா எஸென்ஸ்: ¼ டீஸ்பூன்.

செய்முறை: ஜெலாடின், சர்க்கரை, வனிலா எஸென்ஸ், காப்பி டிகாக்ஷன் ஆகியவற்றைக் கலக்கி, வடிகட்டி, சீரான வெப்பத்தில் கொதிக்க வைக்கவும். அது பாதி திரவம் — பாதி இடமாகும் நிலையில் அடுப்பிலிருந்து எடுத்து, அதைக் குளிர்ந்த நீரில் வைத்துக் கிளறிக் குளிரச் செய்யவும். பிறகு அதை ஃப்ரிஜ்டேரில் பன்னிரண்டு மணி வைத்திர்களானால் ஜெல்லி கெட்டிப்படும்.

பரிமாறுமுன் பாலாடை சேர்க்கவும்.

மேலே குறிப்பிட்ட அளவைகளுக்கு இருபது கோப்பை காப்பி ஜெல்லி கிடைக்கும்.

## காப்பி — கடலை கேக்

**தேவையான பண்டங்கள்:**

காப்பி டிகாக்ஷன்: 1 கோப்பை, வெல்லம்: 3 கோப்பை, வேர்க்கடலை: 2½ கோப்பை, நன்முக அரைத்த காப்பிப் பொடி: 1 சிட்டிகை.

செய்முறை: வேர்க்கடலையை வறுத்து, மேலே உள்ள சிவப்புத் தோலை நீக்கி விடவும். வெல்லத்தையும், காப்பி டிகாக்ஷனையும் கலந்து வாணலியில் கொதிக்க வைக்கவும். பாகைத் தண்ணீரில் ஊற்றிப் பார்த்தால் அது கரையாமலும், ஒட்டாமலும், ரப்பர் போலக் கெட்டிப்படுவதே பதம். இந்தப் பதத்தில். பாகிலே வேர்க்கடலைகளைப் போட்டு ஐந்து நிமிஷம் கிளறவும். இதற்குள் வேர்க்கடலை நன்கு சேர்ந்து, கலவை ஓரளவு கெட்டியும் ஆகும். நன்கு பொடித்த காப்பித் தூளில் ஒரு சிட்டிகை எடுத்துக் கலவை முழுவதன் மீதும் ஒரு சீராகத் தூவி ஞல் மணம் மேலும் கூடும். நெய் தடவிய தட்டில் கலவையைக் கொட்டித் தேவையான பரிமாணத்துக்குக் கேக்குகள் வெட்டவும்.

இந்தத் தின்பண்டங்களை போர்ட் தயாரித்து மத்திய வர்த்தக மந்திரி தினேஷ் சிங் அவர்களைச் சுவைக்கவும் வைத்திருப்பதைப் படத்தில் பார்க்கிறீர்கள். கோடியில் அமர்ந்திருப்பவரே கட்டுரை ஆசிரியர்.

சிந்தனைப் பானமாக—முக்கியமான முடிவுகளெடுக்க உதவும் பானமாக — காப்பியை சர்வதேச ஸ்தாபனம் விளம்பரப்படுத்தி, விற்பனையைப் பெருக்க முயன்று வருகிறது.

பருகுவதோடு இன்னவும் தொடங்கிவிட்டால் இந்தியாவுக்குப் போதுமான அளவு காப்பிக் கொட்டை கிடைக்குமா? அதிருஷ்டவசமாக நமக்குக் கிடைக்கவிருக்கும் அமோக விளைச்சல் காரணமாக இந்தக் கேள்வி எடுபட்டுப் போகிறது. இவ்வாண்டு காப்பி உற்பத்தி 79,000 டன்கள் என்ற சிகரத்தைஅடையும் என எதிர்பார்க்கப்படுகிறது. எனவே, காப்பியை ஏற்றுமதி செய்வதோடு நாமே நிறையப் பருகலாம், இன்னவும் செய்யலாம்.

---

## பியார் முஹப்பத்

கதைக்குக் கால் கிடையாது; கை கிடையாது. கதையில் வரும் காதலுக்கு...? ஒரு வியவஸ்தை கிடையாது. எப்பொழுது, எப்படி, யாரை அது நோயெனப் பீடிக்கும் என்றும் கூற முடியாது. எனவேதான் இவ்விரண்டும் திரையுலகத்துக்கு வரப்பிரசாதமாக அமைகின்றன போலும்! இவற்றைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, ரசிகர்களைச் சமாளிப்பதற்குப் பல கவர்ச்சித் தோற்றங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு உருவாகாத படங்கள் திரை உலகத்தில் இல்லையென்றே கூறி விடலாம். 'பியார் முஹப்பத்' என்னும் ஹிந்திப் படமும் மற்ற எந்தப் படத்துக்கும், தான் சோடையில்லை என்பதேபோல் உருவாக்கப்பட்டிருக்கிறது. கப்பல் காட்சிகளும், பல நாடுகளின் எழில்மிகு தோற்றங்களும் திரைக் கதையை நீட்டப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. ஓரிரு பாடல்கள் உள்ளத்தைக் கிளர்ச்சி கொள்ளும் வகையில் ஒலித்தாலும், இதயத்தில் இடம் பெறும் வாய்ப்பினை ஏனோ பெறவில்லை.



தேவ் ஆனந்த்-ஸாய்ரா பானு, துர்க்கா கோட்டே, பிரேம்நாத், சசிகலா, டேவிட் முதலிய நடிகர்களில் யாருமே தங்கள் நடிப்பால் உயர்ந்து இதயத்தில் இடம் பெறவில்லை. இந்த நாட்களில் திரையிடப்படும் ஹிந்திப் படங்கள் எத்தனை தாழ்ந்து போய் விட்டன என்பதற்கு இன்னுமொரு முத்திரை வைக்கிறது 'பியார் முஹப்பத்'. ஆயினும் பார்த்துப் பரவசப்பட்டுச் சீழ்க்கையடித்துக் குதூகலிக்கும் ரசிகர் குழாத்தைத் திருப்திப்படுத்தத் தவறாத அளவுக்கு 'பிஸினஸ்' தலைதூக்கி நிற்கிறது. அந்த அளவுக்கு வெற்றி, வெற்றிதானே!





# நவராத்திரி

என். எஸ். சிதம்பரம்





சக்தி விழா வந்திடஇச்
சராசரங்கள் அவள்புகழைப்
பக்தியுடன் பரவிடும்! மெய்ப்
பராசக்தி கொலுவிருப்பாள்!





வையம்அவள் பதம்வணங்கும்!
வானும்அவள் கழல்வழுத்தும்!
பயமில்லா அலைகடலும்
பாடிஅவள் இசைமுழக்கும்!





அன்பரெனும் வண்டினங்கள்
அன்னையவள் பதமலரின்
இன்பமுதத் தேனருந்தி
இவ்வுலகை மறந்திருக்கும்!





கருணைபொழி கண்களும் நற்
கனிவுநிறை அருள்முகமும்
திருவுமிகப் பொருந்திஎழில்
தேவியவள் கொலுவிருப்பாள்!



வீரம், அவள் கண்களிலே
விளையாடும்! பகைமடிக்கும்
தீரம், அவள் கரந்திகழும்
திரிசூலம் பறைசாற்றும்!





புவனத்து நாயகியின்
பொற்பதங்கள் ஏத்திடுவோம்!
அவவினைகள் நீங்கியென்றும்
ஆனந்த வாழ்வுறுவோம்



# யாரோ இவர் யாரோ?

## 'சோ'



### அத்தியாயம் 10

பட்டாணியன் வந்து செல்வதையும் ரவி அவனிடம் ஏதோ பேசி அனுப்பு வதையும் முத்து உள்ளே யிருந்து கவ னித்துக் கொண்டுதானிருந்தான். ரவி உள்ளே வந்ததும் ''யார்ரா அவன்?'' என்று கேட்டான் முத்து.

''எவனோ ஒருத்தன்'' என்று மழுப் பினான் ரவி.

''பார்த்தா பட்டாணிக்காரன் போல இருக்கான். இவங்கதானேடா எல்லோருக்கும் கடன் கொடுக்கிறாங் கன்னு சொல்லுவாங்க!''

''எனக்கு அதெல்லாம் தெரியாது. ஏதோ தெருவுக்கு வழி கேட்டான். தெரியலேன்னு சொல்லிஅனுப்பிச்சேன்'' என்று ஓர் அப்பட்டமான பொய்யை ரவி அநாயாசமாக உதிர்த்தான்.

''நல்லவேளை. நீதான் ஒருவேளை அவன் கிட்டே கடன் வாங்கிப்பிட்டு முழிக்கிறியோன்னு நினைச்சேன்.''

''நான் ஏண்டா கடன் வாங்க றேன்?'' என்று ரவி எரிந்து விழுந்தான்.

''கோவிச்சுக்காதேடா...''

''என் சொந்த விவகாரத்திலே எல் லாம் நீ அநாவசியமாகத் தலையிட வேண்டியதில்லே.''

''சரி.''

இப்படி உடனே அடங்கிவிட்ட முத்து வைப் பார்க்க ரவிக்குப் பரிதாபமாக இருந்தது. 'பாவம், உன்னை விட்டால் இந்த முத்துவுக்கு வேறு கதி யார்? இவனைக் காத்து ரட்சிக்க வேண்டியது உன் கடமையல்லவா?' ரவியை அவன் மனச்சாட்சியே குடைந்தது. மனித னுக்கு ஆண்டவன் செய்த மாபெரும் துரோகம், மனச்சாட்சி என்று ஒன்றை வைத்ததுதான். ஆனால் சிலருக்கு மட்டும் ஏனோ மனச்சாட்சியை வைக்கா மல் விட்டு விடுகிறான் பிரும்மதேவன். அப்படிப்பட்டவர்களே இன்று, இந்தப் பூலோகத்தில் செல்வாக்கும் வசதியும் படைத்தவர்களாக இருக்கிறார்கள். உடன் இருந்தே கொல்லும் வியாதி யைப் போல், ஒட்டியிருந்தே கெடுக்கும் நண்பனைப் போல், நம்முள்ளிருந்து கொண்டே நம்மை அழித்து விடுகிறது இந்த மனச்சாட்சி. பிழைக்கும் வழியில் செல்ல ஒரு மனிதன் முற்படும்போது இந்த மனச்சாட்சி தான் அவனைத் தடுத்து நிறுத்தி அவனை நேர் வழியிலே போகச் செய்து அவன் வாழ்க்கையையே குட்டிச்சுவராக்கி விடுகிறது.

ரவியின் மனச்சாட்சி ரவியைப் பார்த்து, 'முத்துவிடம் கோபித்துக் கொள்ளாதே' என்று ஆணையிட்டது. எனவே, ''முத்து... இந்தப் பேச்செல்லாம் எதுக்குடா... நாம இப்போ முக்கியமாச் செய்ய வேண்டிய காரியம் ஒண்ணு இருக்கு. அதைக் கவனிப்போம்'' என்றான் ரவி.

''என்னடா அது?''

''நாம மெட்ராஸ் வந்து சேர்ந்ததுலேருந்து நம்ம ஊருக்கு லெட்டரே போடலே. அதை இப்ப செய்வோம்'' என்றான் ரவி.

''ஆமாம்! லெட்டர்லே என்ன எழுதறது? டாக்டரா வேஷம் போடறதையும், திருடனை வீட்டுக்குள்ளே வசதியாத் தங்க விட்டிருக்கிறதையும் எழுதறதா?''

''முட்டாள் தனமாப் பேசறியே. உனக்கு இப்ப ராஜரத்தினம் வீட்டிலே டாக்டர் வேலே கிடைச்சிருக்குது. அதனாலேயே வேலே கிடைச்சிட்டுதுன்னு நீ உங்கப்பாவுக்குத் தைர்யமா எழுதலாம்.''

''நான் டாக்டர் வேஷம் போடறேன்னு



தெரிஞ்சா எங்கப்பா என்னே நசுக்கிப் போட்டுப்பிடுவாரு.''

''அப்படியே எல்லாத்தையும் எழுதிடணுமா, என்ன? சும்மா மேலோட, 'எனக்கு வேலே கெடச்சிரிச்சு'ன்னு எழுது. அது போதும்.''

''நீ என்ன எழுதப் போறே ரவி?''

''எழுதிப்பிட்டுப் படிச்சுக் காட்டறேன். அதுக்குள்ளே நீயும் உன் லெட்டரை எழுதி முடி!'' என்று கூறிய ரவி, காகிதம் பேனா முதலியவற்றை முத்துவிடம் கொடுத்து விட்டு, தானும் கடிதம் எழுதலானான்.

இருவரும் எழுதி முடித்த பின்னர் ஒருவர் கடிதத்தை மற்றவர் படித்துப் பார்க்க ஆரம்பித்தனர். ரவி முத்து

எழுதிய கடிதத்தைப் படித்தான். குண்டுமணி போன்ற எழுத்துக்களால் கோக்கப்பட்டு நிறுத்தி நிதானமாக எழுதப்பட்டிருந்தது முத்துவின் கடிதம்.

''அப்பாவுக்கு அநேக நமஸ்காரங்கள். இங்கு எல்லோரும் சௌக்கியம். அங்கேயும் சௌக்கியம் என்று நினைக்கிறேன். இப்போது எனக்கு ஒரு வேலை கிடைத்திருக்கிறது. ரவிதான் இந்த வேலையை எனக்கு வாங்கிக் கொடுத்தான். எனக்கு உதவியாக இந்த வேலையில் வேறு ஒருவனும் வந்திருக்கிறான். பெயர் எதிராஜ். அவன் இந்த வேலைக்கே வந்திருப்பான். ஆனால் நான் முந்திக் கொண்டு விட்டேன். அந்த எதிராஜ் ரொம்பவும் நல்லவன். தனக்கும் பிறருக்கும் அவன் வித்தியாசமே பார்ப்பது கிடையாது. பிறர் பொருளெல்லாம் தன் பொருளாகவே நினைக்கிறான். அவன் எனக்கு உதவியாளன் என்று பெயரே ஒழிய உண்மையில் நான் தான் அவனுக்கு உதவி செய்து கொண்டிருக்கிறேன். நம் வீட்டிலிருக்கும் வெள்ளிச் சாமான்கள் பத்திரம். இந்த வேலையை விடுவதற்குள் நாயைக் கண்டு பயப்படும் பழக்கம் என்னை விட்டுப் போய்விடும்! இனி மேல் நாய்கள்தான் என்னைக் கண்டு பயப்படும். அப்பா, ஒரு விஷயம். யாராவது அசோக் என்று சொன்னால், முதலில் அது மனிதன் பெயரா, நாயின் பெயரா என்று கேட்டுக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் கடைசியில் நீங்கள் தான் மாட்டிக் கொண்டு விழிப்பீர்கள். 'ஜகா வாங்கி, பால்மாறாமல் இருப்பது' என்றால் என்ன அர்த்தம், தெரியுமா? தூக்க மாத்திரை கையோடு இருப்பது என்றைக்கும் நல்லது. கண்டதும் காதல் என்பது ஒரு வியாதி. அந்த வியாதி பிடித்தவன் டாக்டராக மாறி விடுவது சகஜம். எல்லாம் ரவியின் செயல். அவனன்றி ஓரணுவும் அசையாது. ரவி யிருக்கப் பயமேன்!

உங்கள் அன்புள்ள
டாக்டர் மேகநாதன்

இதைப் படித்து முடித்த ரவிக்குத் தாங்க முடியாமல் சிரிப்பு வந்தது. ''என்னடா இது முத்து, இப்படி எழுதியிருக்கே?'' என்றான்.

''ஏதோ மனசுலே தோணினதை அப்படியே எழுதிப்பிட்டேன்'' என்றான் முத்து.

''டேய், இதைப் படிச்சா உங்கப்பா உனக்குப் பைத்தியம் பிடிச்சிரிச்சுன்னுதான் நினைப்பார்.''

''அதுவே ஒண்ணும் தப்பில்லையே?''

''சரி..சரி. இநத லெட்டரை இப்படியே போஸ்ட் பண்ணுவோம். உங்கப்பா

என்ன செய்யறருன்னு தமாஷ் பார்க்கலாம். ஆனல் கையெழுத்தை மாத்தித் தொலே. டாக்டர் மேகநாதன்னு போட்டிருக்கியே?''

''என் தொழில் ஞாபகம் வந்திரிச்சு!''

''முதல்லே அதை அடிச்சு முத்துன்னு கையெழுத்தைப் போடு'' என்று ரவி சுத்த, முத்து அவ்வாறே தன் பெயரைக் கையெழுத்திட்டான். அந்தக் கடிதம் கவரிலே வைத்து ஒட்டப்பட்டு, மேல் விலாசம் எழுதித் தபாலில் சேர்ந்துவிடத் தயாராக நின்றது.

ரவியின் கடிதத்தை முத்து படிக்க ஆரம்பித்தான். அவசர அவசரமாகக் கிறுக்கப்பட்டிருந்தது ரவியின் கடிதம்.

''மை டியர் அப்பா,

வந்த காரியத்தில் எனக்குப் பூரண வெற்றி. சின்னத்துரை அவர்களுக்கு இப்போது என்மீது உயிர். நான் கிழித்த கோட்டை அவர் தாண்டுவதில்லை. 'ரவி, ரவி' என்று என்னையே சுற்றிச் சுற்றி வருகிறர். என் வார்த்தையில் அவருக்கு அபார நம்பிக்கை. சித்ராவும் என்னுடன் சகஜமாகப் பழகுகிறள். என்னுடன் பழகிவிட்டு என்னைப் பிடிக்காமல் இருக்க முடியுமா? கூடிய சீக்கிரம் கல்யாணம் நிச்சயம் செய்யச் சின்னதுரையே முற்படலாம்! அவ்வளவு தூரம் அவர் என் மீது பிரியம் வைத்திருக்கிறர். நான் தினம் தவருமல் சனீசுவரன் கோவிலில் அர்ச்சனை செய்கிறேன் என்பதை அம்மாவுக்குச் சொல்லுங்கள்.

உங்கள்
ரவி''

கடிதத்தைப் படித்து முடித்த முத்து, ''ஏண்டா, பட்டாணிக்காரன் வந்துவிட்டுப் போன விஷயத்தை எழுதலே?'' என்று ரவியைப் பார்த்துக் கேட்டான்.

''அதைப் பத்தி நீ பேசவேண்டாம். எனக்குத் தெரியும்!''

''உன் நல்லதுக்குத்தான் சொல்றேன். அவன்கிட்ட ஒண்ணும் விவகாரம் வெச்சுக்காதே.''

''ரொம்ப தாங்ஸ். உன் அட்வைஸ் எனக்குத் தேவை யில்லே'' என்று முடித்த ரவி கடிதத்தை கவரில் வைத்து விலாசத்தை எழுதினன்.

முத்து மீண்டும், ''ஒரு சந்தேகம், ரவி'' என்று ஆரம்பித்தான். ''சித்ராவோட கல்யாணம் நிச்சயம் ஆயிடும்னு அவ்வளவு நிச்சயமா எழுதியிருக்கியே, ஏண்டா இப்படிப் புளுகறே?''

''முத்து, உனக்கு ஒண்ணும் தெரியாது. நான் எழுதியிருக்கிறதுலே பொய்யே கிடையாது. சித்ராவுக்கும் எனக்கும் கூடிய சீக்கிரம் கல்யாணம் நடக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்குது. இப்ப எங்கிட்ட சித்ரா கோபமாப் பேசறளே ஒழிய அவளுக்கு உண்மையிலே என்மேலே காதல்தான். காதலுக்கு ஆரம்பமே கோபம்தான்.''

''ஒரு பொண்ணு நம்மகிட்டக் கோபமாப் பேசின அவ நம்மைக் காதலிக்கிறன்னு அர்த்தமா?''

''ஆமாம்.''

''அய்யய்யோ!'' முத்துவின் முகம் பீதியடைந்தது.

''என்னடா, என்ன?''

''ரவி, இன்னிக்குக் காலையிலே கிரிஜா வீட்டுக்குப் போறபோது வழியிலே ஒரு தெருவிலே தவறிப்போய் ஒரு வயசான அம்மா காலே மிதிச்சுப்பிட்டேன். அவங்க என்னைக் கோபமா கன்னு பின்னுன்னு திட்டினங்க. இப்ப தாண்டா எனக்கு விஷயம் புரியுது!''

''முத்து விளையாடறியா? நான் சொல்ற கோபம் அப்படிப்பட்டது இல்லே. அதுவும் இல்லாம நம்மைப் பார்த்துக் கோபிச்சுக்கிற பொம்பளை காதலிக்கிற வயசுலே இருக்க வேண்டாமா?''

''ரவி, கிரிஜா என்மேலே கோபிக்கவே இல்லேயே. அப்ப அவளுக்கு என் மேலே காதல் இருக்காதா?''

''அது வேறே விதமான காதலா இருக்கலாம்.''

''மொத்தம் உனக்கு எத்தனை விதமான காதல் தெரியும்?''

''பார்த்தா அசடு மாதிரி இருக்கே. என்ன கேள்வியெல்லாம் கேக்கறேடா நீ!'' என்று வியந்தான் ரவி. உண்மையில் இந்த மாதிரி ஒரு கேள்வி கேட்ட முத்துவின் பல்லை உதிர்க்க வேண்டும் என்றுதான் அவன் நினைத்தான். ஆனல் பாழும் மனச்சாட்சி அவனைத் தடுத்து நிறுத்திவிட்டது. என்னே மனச்சாட்சியின் கொடுமை! ஒரு மனிதனின் அல்ப அபிலாஷைகளைக்கூட நிறைவேற்றிக் கொள்ள முடியாமல் இப்படி அநியாயம் செய்கிறதே!

ஒரு வழியாகப் பேச்சு முடிந்து இரண்டு கடிதங்களையும் தபாலில் சேர்த்தனர் ரவியும் முத்துவும்.

தபாலில் சேர்க்கப்பட்ட இரு கடிதங்களும் தபால் பெட்டி, தபாலாபீஸ், ரயில் பிரயாணம், மீண்டும் தபாலாபீஸ், இப்படிப் பல அபாயம் மிகுந்த கண்டங்களிலிருந்து ஈசுவரன் கிருபையால் தப்பித்து, சேர வேண்டிய இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தன.

தணிகாசலம் முத்துவிட மிருந்து வந்த கடிதத்தை ஆவலோடு பிரித்துப் படித்தார். மீண்டும் மீண்டும் அந்தக் கடிதத்தைப் படித்தார். மகனிட

# நெஸ்கா∴பேயின் ருசியிலிருந்தே தெரியும்:

**1** அது தேர்ந்தெடுக்கப்பட்ட தென் னிந்திய பீபெரி காபிக்கொட்டை யிலிருந்து தயாரிக்கப்படும் 100% தூய காபி

**2** அது இன்ஸ்டன்ட் காபி தயாரிப் பதில் உலகிலேயே அதிக அனுபவம் உடையவர்களால் தயாரிக்கப்படுகிறது.

**3** உங்கள் ருசிக்கேற்றபடி 'ஸ்ட்ராங் காகவோ' 'லைட்டாகவோ' போட்டுக் கொள்ளக்கூடியது.



குறைந்த அளவு: ஸ்பூன் நிரம்ப: குவித்து:

**4** நெஸ்கா∴பேயின் ருசியிலிருந்து தெரியவராத விஷயம்: அது சிக்கனமானது. நேரடியாக கப்பிலேயே தயாரித்துக் கொள்ளக் கூடியதால் அதை தேவையான அளவு மட்டுமே போட்டுக் கொண்டால் போதும்.

NESTLÉ

ஒரு நெஸ்லே தயாரிப்பு






**NESCAFÉ*** நெஸ்காஃபே—தனிச்சிறப்புள்ள தரமான காபி!

* நெஸ்கா∴பே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட் காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும்

INCE 6248 A

மிருந்து வந்த கடிதமாயிற்றே என்ற பாச உணர்ச்சியினால் அல்ல. தன் செல்வ மகன் என்ன எழுதியிருக்கிறான் என்றே அவருக்குப் புரியவில்லை. ஒரே குழப்பமாக இருந்தது. பல விஷயங்கள் அவர் மனக்கண் முன் எழுந்து தங்களுக்குப் பின் கொக்கி போட்டுக் கொண்டு கேள்விக் குறிகளாக மாறி நின்று தாண்டவமாடின.

''அசோக் என்பது நாயின் பெயரா மனிதனின் பெயரா என்று கேட்க வேண்டிய அவசியம் என்ன? 'ஜகா வாங்கிப் பால்மாறாமல் இருப்பது' என்பது சம்ஸ்கிருதம் போலல்லவா இருக்கிறது? முத்து எப்போது சம்ஸ்கிருதம் கற்றுக் கொண்டான்? தூக்க மாத்திரை ஏன் எப்போதும் கையோடு இருக்க வேண்டும்?'' — இப்படிப் பலப் பல கேள்விகளுக்கு விடை யறியாமல் தவித்தார். கடைசியில் டாக்டர் மேகநாதன் என்று எழுதி அடிக்கப்பட்டு முத்து என்று எழுதியிருப்பதையும் பார்த்தார். அவருக்குக் குழப்பம் மேலும் அதிகரித்தது. ''சரி, சென்னைக்கே சென்று முத்துவை நேரில் பார்த்தா லொழிய மனத்துக்கு நிம்மதி ஏற்படாது'' என்று தீர்மானித்தார். ஆனால் நிலபுலன்களில் அறுவடை சமயத்தில் எப்படிப் பட்டணம் போவது என்று யோசித்தார். நல்லபடியாகக் கவனித்து அறுவடை செய்தால்தானே அரசாங்கத்து அதிகாரிகள் வந்து கொள்முதல் செய்யச் சௌகரியமாக இருக்கும்? 'சரி, ரவி இருக்கிறான். முத்துவைக் கவனித்துக் கொள்வான். நாம் அறுவடையைக் கவனித்துவிட்டுச் செல்வோம்' என்று தீர்மானம் செய்தார் தணிகாசலம். மீண்டும் கடிதத்தைப் பிரித்தார். கடைசி முறையாக முயன்று பார்த்தால் ஒருவேளை அர்த்தம் புரிந்தாலும் புரியலாம் என்ற ஒரு நைப்பாசை, சபலம். கடிதத்தைப் பிரித்த உடன் முதலில் அவர் கண்களில் பட்ட வார்த்தைகள் ''ஜகா வாங்கிப் பால்மாறாமல் ....'' இந்த மிரட்டலுக்குப் பயந்து கடிதத்தைத் தூக்கி எறிந்தார் தணிகாசலம். ''இந்தப் பயல் முத்து நம்மை ஏதோ ரகஸ்ய பாஷையிலே திட்டியிருக்கிறான். இருக்கட்டும். அறுவடை முடிஞ்சு பட்டணத்துக்குப் போய் அவனைக் கவனிச்சுக்கலாம். அவன் தான் ஜகா, அவன்தான் பால்மாறு!'' என்று மனத்துள் சபித்துக் கொண்டு நிலத்தைப் பார்க்கப் புறப்பட்டார் தணிகாசலம்.

ரவி எழுதிய கடிதத்தைத் தபால்காரன் சபாபதியிடம் கொடுத்துச் சென்றான். கடிதத்தைப் படித்த சபாபதியின் முகம் மந்தகாச மடைந்தது.

கடிதத்தை எடுத்துக் கொண்டு தம் மனைவியிடம் ஓடினார்

''பார்த்தியா இந்த லெட்டரை. இந்தா, படிச்சுப் பாரு'' என்று ரவியின் தாயாரிடம் கடிதத்தைக் கொடுத்து விட்டு, அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார், அது மந்தகாச மடைகிறதா என்று. மந்தகாசம் தெரிந்தது.

''எப்படி நம்ம பையன்!'' என்றார் சபாபதி.

''அவன் என்ன இருந்தாலும் கெட்டிக்காரன்தான். என்னையே உரிச்சு வெச்சிருக்கிறான்!'' என்றாள் ரவியின் தாயார்.

''எப்படியோ சின்னதுரை மனசை மாத்திப்புட்டானே, ஆச்சரியம்மா இல்லே?''

''அவரும் எத்தனை நாளைக்குத்தான் விரோதம் பாராட்டிக்கிட்டு இருப்பாரு. நம்ம ரவி முகத்தைப் பார்த்த உடனே எல்லாத்தையும் மறந்துட்டிருக்கார். அவ்வளவுதான்.''

ஒரு தாயும் தந்தையும் தான் பெற்றெடுத்த குழந்தைகள் மீதுதான் எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்! தன் மகன் கெட்டழிந்தால், அதற்குக் காரணம் அடுத்த வீட்டுப் பிள்ளைகள்தான் என்று நினைக்கிறார்கள். அவன் பரீட்சையில் 'கோட்' அடித்தால், பரீட்சைப் பேப்பர் திருத்தியவன் அயோக்கியத்தனம் செய்துவிட்டதாகக் கூறுகிறார்கள். ஒவ்வொரு பெண்ணும் ஆணும் தங்கள் பெற்றோர்கள் தங்கள் மீது வைத்திருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கையைச் சற்றே உணருவார்களே யானால் நமது மாணவ சமுதாயம் எவ்வளவு சீரடையும்! அந்த நம்பிக்கைக்குத் தாங்கள் செய்யும் துரோகத்தைச் சிறிது எண்ணிப் பார்த்தால் நமது இளைய பாரதத்தினர் எவ்வளவோ நன்மையடையலாம். ஆனால் அதற்கெல்லாம் அவர்களுக்கு நேரமேது! கலலூரிக்குப் போவதற்கே நேரமில்லாதவர்களுக்கு இதைப் பற்றியெல்லாம் மனத்தை அலட்டிக் கொள்ளப் பொழுது எங்கே இருக்கிறது! சினிமா பார்க்க வேண்டாமா? பார்த்துவிட்டு வெளியே வந்து மறியல் செய்ய வேண்டாமா? ஸ்டிரைக் செய்ய வேண்டாமா? மாலையில் சற்று நேரம் கிடைக்கும் என்று பார்த்தால் இந்த பாழாய்ப் போன பெண்கள் கல்லூரிகளை அப்போதுதானே விட்டுத் தொலைக்கிறார்கள்! அங்கு வாசலில் போய் யார் நிற்பது? சரி, கல்லூரி ஹாஸ்டலுக்கு இரவு வந்து சேர்ந்தாலாவது நேரம் கிடைக்கிறதா? ஜூனியர், முதல் வருப் மாணவர்களைக் கலாட்டா செய்து, வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ள வேண்டாமா? இப்படிப் பலப்பல அத்தியாவசியமான பிரச்னைகளில் ஈடுபட்டிருக்கும் சில மாணவர்கள் எப்போதேனும் நேரம் கிடைக்கும்போது தங்கள் பெற்றோர்களையும் அவர்கள் தங்கள் மீது வைத்திருக்கும் நம்பிக்கையையும் பற்றிச்சிந்திப்பார்களாக!

ரவியின் அருமை பெருமைகளைப் பற்றிச் சபாபதியும் அவர் மனைவியும் மாறி மாறிப் பேசித் தீர்த்த பிறகு, சபாபதி, ''சின்னதுரை பெருந்தன்மையாக விரோதத்தை விட்டுக் கொடுத்திட்டான். ஆனா எனக்கு ஒரு கடுதாசு கூடப் போடலை, பார்த்தியா?'' என்று மனைவியிடம் அங்கலாய்த்துக் கொண்டார்.

''அதனாலே என்னங்க, அவருக்குக் கொஞ்சம் வெட்கமா இருக்குதோ, என்னவோ? நீங்கதான் முதல்லே அவருக்குக் கடிதாசு போடுங்களேன்'' என்று உபதேசம் செய்தாள் ரவியின் தாயார்.

பெண் புத்தியைக் கேட்டு உருப்பட்ட குடும்பம் உண்டா? சபாபதி மனைவியின் பேச்சை ஏற்றார். ரவியின் முயற்சிக்கு அது எப்படிப்பட்ட தடங்கலாக விளையக்கூடும் என்பதை அறியாமல், சின்னதுரைக்குக் கடிதம் எழுதினார்.

''அன்புள்ள சின்னதுரைக்கு. என் மகன் ரவி அங்கு வந்து சேர்ந்தது விருந்து நடந்ததை யெல்லாம் அறிந்தேன். உன் மனம் மாறி ரவியிடம் நீ காட்டும் அன்புக்கு எனது நன்றி. எப்படியோ நம் இரண்டு குடும்பங்களும் மீண்டும் ஒன்று சேர்ந்ததே, அதுவே பெரிய காரியம். கூடிய சீக்கிரமே ரவி—சித்ரா கல்யாண விஷயம் பற்றிப் பேச நானே நேரில் வருகிறேன்.

இப்படிக்கு
சபாபதி.''

கடிதத்தை எடுத்துப் போய்த் தபாலில் சேர்த்து விட்டு வந்தார் சபாபதி. ரவியின் திட்டங்களைத் தவிடுபொடியாக்கி, தரை மட்டமாக்க ஒரு காரியத்தைச் செய்துவிட்டு ஒன்றுமே யறியாமல், களங்கமற்ற மனத்தோடு கவலையில்லாமல் வீட்டுக்குத் திரும்பினார். ஜப்பான் மீது 'ஆட்டம் பாம்' வீச உத்தரவளித்த அமெரிக்க ஜனாதிபதி ட்ருமனுக்கும் தமக்கும் இப்போது பெரிய வித்தியாசம் ஒன்றுமில்லை என்று தெரிந்திருந்தால் சபாபதி ஒருவேளை இன்னும் பெருமிதம் அடைந்திருக்கலாம்! **(தொடரும்)**

"இன்று ஏன் கௌரி இத்தனை லேட்?"

மிக அருகில் ஆண் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள் கௌரி. பிரபாகரன் அவளை ஒட்டினாற்போல் வந்து கொண்டிருந்தான். நாணத்தினால் அவள் கன்னங்கள் குப்பென்று சிவந்தன. சூழ்நிலையை நோட்டமிட்டவள் சற்றே ஒதுங்கி நடந்தாள்.

பிரபாகரன் ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான். உதட்டில் குறும்புச் சிரிப்பு நெளிந்தோட, "உம்.... இன்று இப்படி; இன்னும் இருபது நாள் கழித்து?.... இப்படி ஒதுங்கிப் போவாயா? போக விடுவேனா?" என்றான்.

அவள் உள்ளம் கிளுகிளுத்தது. லஜ்ஜை நிலத்தை நோக்கி முகத்தைக் கவிழ வைத்தது.

"தினமுமே இவ்வளவு நேரம் ஆகிவிடுகிறதா, கௌரி?"

"இல்லை, இல்லை. இன்று என் தோழி பங்கஜா வீட்டில் சிறு வைபவம். அங்கே வந்ததால் சிறிது தாமதம்."

"ஓகோ!.... அப்படி நேர்ந்ததும் என் அதிர்ஷ்டந்தான்!"

கௌரி சட்டென்று அவனை நிமிர்ந்து பார்த்தாள்; பார்வையில் கேள்விக்குறி பளிச்சிட்டது.

"எங்கள் அலுவலக மானேஜருக்கு உடல் நலமில்லை. அவரைப் பார்க்க அவர் பங்களாவுக்குப் போய் வருகிறேன். உன்னைத் தனிமையில் சந்திக்கவேண்டும் என்று சில நாட்களாக எனக்கு ஓர் எண்ணம். நான் இந்தப் பக்கம் வரவும், கல்லூரியிலிருந்து நீ லேட்டாக வரவும், இது எனக்கு ஒரு நல் வாய்ப்பாக அமைந்தது. அ..... அதோ.... அங்கே.... அந்தப் பூங்காவில்.... சற்று நேரம் உட்கார்ந்து பேசலாமா?"

மீண்டும் அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள். முகத்தில் கவலை நிழலாடிற்று.

"நேரம் மிகுதியாக ஆகிவிட்டதே!..... அம்மா கவலைப்படுவாளே!"

"நீ உன் தோழி வீட்டு வைபவத்துக்குப் போவது உன் அம்மாவுக்குத் தெரியுமோ, இல்லையோ?"

"தெரியும்..... ஆனாலும்.... அதிக நேரம் ஆகக்கூடாதல்லவா?"

"உண்மைதான். ஐந்து நிமிடம்—ஐந்தே நிமிடம்."

இருவரும் பூங்காவினுள் நுழைந்தனர். இருக்கை ஒன்றை அடைந்து அமர்ந்தனர். வேண்டுமென்றே முக்கால் இடத்தை அவன் அடைத்துக் கொண்டான். எஞ்சிய கால் இடத்தில் புத்தகங்களை வைத்துவிட்டு அந்தச் சிமெண்ட் இருக்கையின் கைப் பிடியில் சாய்ந்தாற்போல் அவள் நின்று கொண்டாள்.

அவன் அவளுடைய புத்தகங்களை எடுத்துத் தன் மடியிலே வைத்துக் கொண்டு அவன்



பக்கமாக நகர்ந்து கொண்டாள். சற்று நேரம் ஒன்றுமே பேசாமல் அவள் முகத்தையே ஊடுருவினன்.

அவள் அவன் முகத்தையும் பார்த்தாள், சுற்றுப்புறத்தையும் பார்த்தாள், தன் கைக் கடிகாரத்தையும் பார்த்தாள்.

''திருமண அழைப்பு அச்சான பின்புமா நீ என்னே வேற்று மனிதனுகக் கருதுகிருய்?'' என்றவன் மெல்ல அவள் மென்கரத்தைப் பற்றினன். அவள் மெதுவாக அதை விடுவித்துக் கொண்டே, ''இணைற்று நீரை வெள்ளம் கொண்டு போய் விடுமா?'' என்ருள். அவள் கரங்கள் நடுங்குவதை அவன் கண்டான். முகத்திலே சிறிது கடுமை தோன்ற, எடுத்த அவள் புத்தகத்தை இருந்த இடத்திலேயே வைத்து விட்டுப் பின்னுக்கு நகர்ந்து கொண்டாள்.

அவள் நிலே கண்டு அவன் பயந்து போனுன். ''என் மேல்..... கோபமா?....'' என்று நா தழுதழுக்கக் கேட்டான்.

''உன் மேல் கோபம் கொள்ள எனக்கென்ன உரிமை இருக்கிறது? உன்னேப் பூங்காவுக்கு அழைத்தது தவறு, ஒட்டி உறவாட முயன்றது தவறு, இனியும் உன்னேக் காக்க வைப்பது பெருந்தவறு! நீ உன் வழியில்; நான் என் வழியில் போகிறேன் !''

அவன் எழுந்தான்; அவளுக்கு அழுகையே வந்துவிட்டது. இரண்டு எட்டு எடுத்து வைத்தவன் நின்ருன் ; அவள் பக்கம் திரும்பாமலே சொன்னுன்: ''எனக்கு ஒரு சந்தேகம் இருந்தது. அதைத் தீர்த்துக் கொள்ள முயன்றேன். தீர்ந்துவிட்டது. நான் வருகிறேன்.'' — அவன் மேலும் ஓர் எட்டு எடுத்து வைத்தான்.

''ஏ, அப்பா!.... இவ்வளவு கோபமா!.... என்ன சந்தேகம் அது?''

''உனக்கு என்னேப் பிடிக்கவில்லேயோ என்று ஒரு சந்தேகம். நான் கொண்ட ஐயம் சரிதான் என்பதை நீ உறுதி செய்து விட்டாய்!''

''நீங்கள்.... என்ன சொல்கிறீர்கள்?''

பிரபாகரன், வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு அவள் பக்கம் திரும்பினன். ''திருமணம் பேசுமுன் சில சமயம் உன்னேப் பார்த்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம் உன் முகம் முழுமதியாய் ஒளிர்ந்தது. அதனுலேயே உன்னே நான் விரும்பினேன். ஆனல் பிறகு.... முழுமதியைக் கிரகணம் மறைப்பது போல் உன் முகத்தில் இருள் கவிந்திருப்பதைக் காண என் மனம் பொறுக்கவில்லே. காரணம்? உனக்கு என்னேப் பிடிக்கவில்லே ; அப்படித் தானே ?''




''இது உங்கள் கற்பனே!'' என்ருள் கௌரி, அழுத்தமாக.

''பின், உன்னிடம் ஏற்பட்டுள்ள மாறுதலுக்குக் காரணம்?''

''ஒ...ன்...று...ம் இ...ல்...லே...''

''என்னிடமே பொய் சொல்கிருயா?.... உண்மையைச் சொல்ல மாட்டாயா?''

கௌரிக்கு அழுகை குமுறி வந்தது. ''சொல்கிறேன்;.... ஆனல்.... உண்மையை அறிந்தபின்... நீங்கள் என்னேப் புறக்கணித்து விடக் கூடாது. நான் கூறும் செய்தியை யாரிடமும் வெளியிடவும் கூடாது. அப்படி நடந்து கொள்வீர்களா ?''

''உறுதியாக !''

''என் மூத்த தமையன் பம்பாயில் இருக்கிருன். அவன் என் திருமணத்துக்கு வரப்போவதில்லே. அந்த வருத்தம்தான் !''

''ஏன் அவன் வரப் போவதில்லே?''

''என் அப்பா அநுமதிக்கவில்லே.''

''காரணம்?''

''அப்பா அவனுக்கு ஒரு பெண்ணேப் பேசினர்; அண்ணு அதை மறுத்தான். அதிலேயே அப்பாவுக்கு அவன் மேல் கோபம். அவன் வேறு ஒரு பெண்ணே மணக்க விரும்பினன். அப்பா அதை மறுத்தார். அவன் வற்புறுத்தினன். அப்பாவின் கோபம் இருமடங்காயிற்று. 'என் முகத்தில் விழிக்காதே! வீட்டினின்றும் வெளியேறு!' என்ருர். அவன் அப்படியே வெளியேறி விட்டான். தான் விரும்பிய பெண்ணே மணந்து கொண்டு பம்பாயில் வாழ்ந்து வருகிருன். இப்பொழுது அவனுக்கு நாலு வயதில் ஒரு பையன்கூட இருக்கிருன்.....''

''பூ! இது ஒரு பெரிய விஷயமா?.... பெரியவர்கள் அப்படித்தான் இருப்பார்கள். காலம் செல்லச் செல்ல......''

''இல்லே. என் அப்பா வைராக்கியம் மிகுந்தவர். மேலும், என் அண்ணாவின் மனைவி என் அப்பாவின் பரம வைரியின் பெண்!''

''பலே! இது மிகவும் நன்றாக இருக்கிறது! அது இருக்கட்டும், இதெல்லாம் பழங்கதை தானே? உன்னிடம் புது வருத்தம் தோன்றக் காரணம்?''

''அண்ணா விஷயத்தில் நாங்கள் எல்லாரும் ஒன்று; அப்பா மட்டும் தனி. எங்களுக்குள் கடிதப் போக்குவரத்து உண்டு. என் திருமணம் நடைபெறுவது அண்ணாவுக்குத் தெரியும். வைர நெக்லெஸ், பட்டுப் புடவை, ஆயிரத்தொரு ரூபாய் பணம் எல்லாம் அனுப்பியிருக்கிறான். 'எல்லாரும் சேர்ந்து மன்றாடி அப்பா என்னை — குடும்பத்தோடு— ஏற்றுக் கொள்ளும்படி செய்யுங்கள்' என்று எழுதியிருந்தான். எங்களுக்கெல்லாம் அண்ணாவையும், அவன் மனைவியையும், குழந்தையையும் பார்க்க வேண்டும் என்று கொள்ளை ஆசை. அப்பாவிடம் அழுது தொழுது, கெஞ்சி மன்றாடிப் பார்த்தோம். அவர் மனம் இளகவே இல்லே. 'நான் அல்லது அவன்; இருவரில் ஒருவருக்குத்தான் இந்தக் குடும்பத்தில் இடம். அவன்தான் வேண்டும் என்று நீங்கள் அனைவரும் விரும்பினால் நான் இப்பொழுதே இங்கிருந்து வெளியேறி விடுகிறேன்' என்றார். பத்தாண்டுப் பிளவு இத் திருமணத்தில் மறையுமோ என்ற என் நைப்பாசை அற்றுப் போகவே என் வருத்தம் மிகுதியாகி விட்டது......''

''மூன்று அண்ணன்மார் இருக்கையில் மூத்த அண்ணன் திருமணத்தில் கலந்து கொள்ளாவிட்டால் என்ன?''

''அவன் மார் மேலும் தோள் மேலும் வளர்ந்தவன் நான். சீராட்டிப் பாராட்டி என்னை அருமை பெருமையுடன் வளர்த்தவன் அவன்.''

''நம் திருமணம் ஆனபின் நானும் நீயும் உன் அண்ணனோடு உறவு கொண்டால் உன் அப்பாவால் என்ன செய்ய முடியும்?''

கௌரி பதில் பேசவில்லே. கைக்குட்டையால் கண்ணீரை ஒற்றியபடி தலே குனிந்து நின்றான்.

''நான் அதைச் செய்கிறேன், கௌரி. நீ வருத்தப்படாதே. எப்போதும் போல் மலர்ந்த முகத்துடன் இரு.''

''இப்போது மகிழ்ச்சியால் என் உள்ளம் நிறைகிறது. இதை..... இந்த விவரங்களே யாரிடமும் சொல்ல வேண்டாம்.....''

''ஆகட்டும். உன் அப்பாவுக்கு மட்டும் தான் இது பெரிய விஷயம்; வேறு யாருமே இதைப் பொருட்படுத்த மாட்டார்கள். சரி, நேரமாகி விட்டது. புறப்படலாம். எங்கே, என்னைப் பார்...... கொஞ்சம் சிரி.....''

கௌரி சிரித்தாள்; அவள் கண்ணீரும் சிரித்தது.

''அம்மா....!''

பெருங்குரலில் அழைத்தபடி வீட்டினுள் நுழைந்தான் பிரபாகரன்.

''என்னடா, பிரபா?.... வருகிறபோதே தடபுடல் செய்கிறாயே!''

''தடபுடலாவது, மண்ணாங்கட்டியாவது! அப்பா எங்கே.....? திருமண அழைப்பு இன்னும் யாருக்கும் அனுப்பவில்லேயே!''

''ஏன்....? ஏனடா....? என்ன சமாசாரம்?'' — மீனாட்சி பதறினாள். மாடியிலிருந்து கைலாசமும் அங்கே வந்தார்.

''இந்தத் திருமணத்தை நிறுத்திவிட வேண்டும்!''

''என்னடா உளறுகிறாய்?''

''நான் ஒன்றும் உளறவில்லே. அந்தப் பெண்ணின் மூத்த தமையன் ஒருவன் எங்கோ யாரோ தகாத குடும்பப் பெண்ணேக் கல்யாணம் செய்து கொண்டு வாழ்கிறானாம்!''

''என்ன!'' என்றாள் மீனாட்சி.

''மூடடா, வாயை! பெண்ணின் தமையன்தானேடா? தமக்கை, தங்கை முதலிய பெண்கள் பதமாக இருக்கிறார்கள் அல்லவா?''

''ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதியா? பெற்ற தகப்பனாரே குடும்பத்திலிருந்து புறக்கணித்து விட்டார் என்றால்...?''

''அப்புறம் நமக்கென்னடா? அவன் உறவு இல்லே..... அது போதுமே. மேலும், அந்தப் பையன் அப்படி ஒன்றும் தாறுமாறாகச் செய்துவிட வில்லேயாம். அவன் தகப்பனாரின் விரோதியின் பெண்ணேக் கட்டிக் கொண்டிருக்கிறானாம்; அவ்வளவுதான்.''

''உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் மீனாட்சி.

''எல்லாம் குருமூர்த்தி சொன்னார்.....'' என்றார் கைலாசம் அலட்சியமாக.

''குருமூர்த்தி மாமாவுக்கென்ன? எல்லாம் சொல்வார். மணையிலே உட்காரப் போகிறவர் அவரா?'' என்று சொல்லிக் கொண்டே மாடிக்குப் போக வெளி வராந்தாவை நோக்கி நடந்தான் பிரபாகரன்.

உள்ளே கைலாசம் என்னவோ மீனாட்சியிடம் கிசுகிசுத்தார். வெளி வராந்தாவில் நின்றிருந்த குருமூர்த்தி பிரபாகரனேக் கண்டதும், ''என்னடா, பயலே! பேச்செல்லாம் ஒரு மாதிரியாக.....'' என்று ஆரம்பித்தார். பிரபாகரன் நாக்கைக் கடித்துக் கொண்டான். வாயில் கை வைத்து, ''இரையாதீர்கள், மாமா!.....'' என்று கெஞ்சினான்.

''உம்!.... ஜாக்கிரதை!.... குட்டையெல்லாம் உடைத்து விடுவேன்! அன்று, 'கௌரி, கௌரி' என்று என் காலேப் பிடித்துக்கொண்டு கெஞ்சி உயிரை வாங்கிவிட்டு.....''

''இப்பொழுதும் உங்கள் காலில் விழுகிறேன், மாமா. நானே அப்பாவும் அம்மாவும் யார் பேச்சையாவது கேட்டுக் கொண்டு முரண்டு செய்யாமல் இருக்க அணைகோலினேன் மாமா. தயவுசெய்து இரையாதீர்கள்'' என்று கும்பிட்டபடி மாடிப் படிக்கட்டில் ஏறினான். ''போக்கிரி!'' என்று அவன் தோளில் தட்டிவிட்டு உள்ளே சென்றார் குருமூர்த்தி.

நாடகக் காட்சிகள் வெற்றிகரமாக அமைவதை எண்ணி மகிழ்ந்த பிரபாகரன், சீட்டியடித்தபடி உடை மாற்றிக் கொள்ளலானான். மாடிப்படியில் காலடி ஓசை கேட்டுச் சீட்டியடிப்பதை நிறுத்தினான். மீனாட்சியம்மாள் காப்பியுடன் வந்தாள்.

"நம் குடும்பம் இன்று இவ்வளவு நல்ல நிலைமையில் இருப்பதற்குக் காரணம் குரு மூர்த்தி மாமா என்பது உனக்கும் தெரியும். அடி நாளிலிருந்து அவர் கிழித்த கோட்டை உன் அப்பா தாண்டுவதில்லை. அவரும் நமக்கு எது நல்லதோ அதையே செய்வார். அப்படிப் பட்டவர் பார்த்து ஏற்பாடு செய்திருக்கிற சம்பந்தம் குறையுள்ளதாக இருக்குமா? நீயே சொல். வீணுக்கு ரகளை செய்யாதே. நாலு பேரிடம் இதையெல்லாம் பற்றிப் பேசாதே." இது மீனாட்சியின் சமாதானம்.

"பெரியவர்களாகிய உங்களுக்கு இல்லாத மான — அவமானம் எனக்கு என்ன அம்மா! கேள்விப்பட்ட செய்தியை உங்கள் காதில் போட்டேன். அவ்வளவுதான்" என்றான் பிரபாகரன். மீனாட்சி கீழே சென்றாள்; பிரபாகரன் சிரித்துக் கொண்டான்.

"கெட்டி மேளம்! கெட்டி மேளம்!" என்று பல குரல்கள் எழுந்தன; பல ஆள் காட்டி விரல்கள் அசைந்தன. நாககரத்தில் கெட்டி மேளம் நகநகவென்று முழங்கிற்று. வேதியர்கள் மறை ஓத, பெண்கள் கௌரி கல்யாணம் பாட, பிரபாகரன் கௌரியின் கழுத்திலே மாங்கல்யத்தை அணிவித்தான். மணச் சடங்குகள் மேலும் தொடர்ந்தன. அப்போது......

பந்தல் முகப்பில் கார் ஒன்று வந்துநின்றது. அதிலிருந்து இறங்கிய வாலிபன் பரிசுப் பொருள்கள் பலவற்றைச் சுமந்தபடி மண வறையை அணுகினான். அவனைக் கண்டதும், "ஹலோ, பாஸ்கர்! ஹலோ! ஹலோ!" என்று பிரபாகரன் கூவினான்.

பாஸ்கர்.....!

பலரும் திரும்பிப் பார்த்தனர். மணப் பெண்ணாய் அமர்ந்திருந்த கௌரியும் நிமிர்ந்து பார்த்தாள். உடனே அவள் முகம் மலர்ந்தது; 'அண்ணா!.... அண்ணா!' என்று அகம் குழைந்தது.

மணமக்களைப் பார்த்துப் பூரித்த நிலையில் அமர்ந்திருந்த சங்கரனின் முகம் நீக்கோண மாய் மாறிற்று. இருக்கையினின்று விருட் டென்று எழுந்தார்; அங்கிருந்து நடந்து மறைந்தார். அவரையே கவனித்துக் கொண் டிருந்த பிரபாகரன் சிரித்தான். பாஸ்கரனின் முகத்தில் வேதனை படர்ந்தது.

"வனஜாவும் குமாரும் வரவில்லையா?" என்று பிரபாகரன் கேட்டான்.

"வந்திருக்கிறார்கள்; காரில் இருக் கிறார்கள்" என்ற பாஸ்கரனின் குரல் கர கரத்து ஒலித்தது.

சடங்குகள் முடிந்து தம்பதிகள் மணையி னின்றும் எழுந்தனர். "முதலில் தாயார் தகப்பனார், அடுத்து மாமியார் மாமனார் இப்படி எல்லாருக்கும் நமஸ்காரம் செய், பிரபாகரா!" என்றார் வாத்தியார். ஆனால் பிரபாகரனும் கௌரியும் முதலில் பாஸ்கர னைத்தான் வணங்கினர். பிறகு கைலாசம், மீனாட்சி இருவரையும் நமஸ்கரித்தனர். அடுத்து, நமஸ்காரம் செய்யச் சங்கரன், பார்வதி — இருவருமே அங்கில்லை.

பிரபாகரன் பாஸ்கரன் செவியில் ஏதோ சொல்லிவிட்டுக் கௌரியுடன் கைகோத்தபடி சங்கரனிடம் சென்றான். அவர் சாய்வுநாற் காலியில் கிடந்தார். அருகே பார்வதி நின்று விசிறிக் கொண்டிருந்தாள்.

"என்ன மாமா? மணையிலிருந்து எழுந்த தும் முதலில் நமஸ்காரம் செய்ய நீங்கள் அங்கே இல்லையே?.... ஏன் இப்படி....!"

சங்கரன் எழுந்தார். "மனம் சரியாக இல்லை" என்றார்.

"ஏன்?.... அப்படி என்ன வந்தது திடீ ரென்று?"

"என்னைக் கேட்டா அதை நீ தெரிந்து கொள்ள வேண்டும்? 'அவன்' உன் நண்பன் என்றால் எல்லாக் கதையும் உனக்குத்தெரிந்தே இருக்கும். திட்டமிட்டுத்தானே நீயும் அழைத்திருக்கிறாய்; அவனும் வந்திருக்கிறான்? அப்புறம் என்ன? நீங்கள் சந்தோஷமாக இருங்கள்!"

"நீங்கள்....? உங்களுக்குச் சந்தோஷம் இல்லையா?"

"அதைக் கலைக்கத்தானே அவன் வந்திருக் கிறான்......? பகைவனின் மகளை மணந்த அவனும் எனக்குப் பகைவன்தானே?"

"அதெப்படி? நஞ்சுக்கு நஞ்சு மாற்று என்று நீ கேள்விப்பட்டதில்லையா? அது போலப் பகைக்குப் பகை.....?" என்று கேட் டுக்கொண்டே ஓடிவந்த குமாரை வாரி எடுத்து அணைத்துக் கொண்டார் சங்கரன். அவர் கண்களில் நீர் நிறைந்தது; அந்த நீரில் பகை மறைந்தது.

அனைவரும் அந்த ஆனந்தபாஷ்பத்தைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்டனர். "பிரிந்திருந்த இரு ஆறுகளை இணைக்க மூன்று வது ஆறு ஒன்று தேவைப்பட்டது. திரிவேணி சங்கமம் என்பது இதுதான் போலும்!" என்று பேசிக் கொண்டனர்.

"ஆம்; இதையேதான் முக்கூடல் என்பது" என்றார் ஒரு தமிழ் அன்பர்.




"கூல் டிரிங்ஸ்னு போர்டு மாட்டிட்டு சோடா, கலர், ஆரஞ்சு, கிரஷ், சர்பத் எதுவும் இல்லேங் கிறியே! இந்த விளக்கெண்ணெய் புட்டிதான் கூல்டிரிங்கா?"

"பின்னே இல்லேங்களா? விளக்கெண்ணெய் குளிர்ச்சின்னு குழந்தைகூடச் சொல்லுமே?"

# கல்லுக்குள் ஈரம்

ர. சு. நல்லபெருமாள்

## அத்தியாயம் 39

## கண்ணீர்க் கடல்

**வே**தனையும் கூச்சமும் கமலவாசகியை அலைக்கழித்தன. திரிவேணியின் உபசரணை அவளுக்கு வேம்பாய்க் கசந்தது.

''விசிற வேண்டாம்!'' என்றாள் கமலவாசகி.

''புழுக்கமாயிருக்கிறதே. கொஞ்சம் படுத்திருங்கள்'' என்றாள் திரிவேணி.

கமலவாசகியால் அமைதியாகப் படுத்திருக்க முடியவில்லை. திரிவேணியின் வீங்கிய கன்னம் கமலவாசகியின் பார்வையில் புகுந்து மனத்தைக் குடைந்து கொண்டே இருந்தது. திரிவேணி வீசிக் கொண்டிருந்த விசிறியை வாங்கித் தூர வைத்தாள் கமலவாசகி. சற்றுக் குனிந்தபோது தலைக் கட்டு அவிழ்ந்து விடவே திரிவேணி அதைக் கட்டி விட்டாள்.

''என்னை உங்கள் வீட்டுக்கு எதற்காகத் தூக்கி வந்தீர்கள்?''



என்று உள்ளக் குமுறலுடன் எரித்து விடு பவள் போலக் கேட்டாள் கமலவாசகி.

''கூட்டத்துக்குள் அகப்பட்டுக் கொண் டீர்கள். உங்களுக்கு ஆபத்து நேர்ந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான்'' என்றாள் திரிவேணி அமைதியாக.

''அதைப் பற்றி நீங்கள் கவலைப்படுவா னேன்?''




''சத்தியாக்கிரகிகள் உங்களைத் தாக்கினார்கள் என்ற பழி ஏற்படக் கூடாது. யாரையும் தாக்குவது எங்கள் கொள்கை அல்ல.''

இதைக் கேட்டுக் கமலவாசகி கூனிக் குறுகிப் போனாள். தன்னைக் காப்பாற்றி வீட்டுக்குத் தூக்கி வந்தவளைக் கன்னத்தில் ஓங்கி அடித்துவிட்டோமே என்ற நினைவில் அவள் உள்ளம் பரிதவித்தது. திரிவேணியின் முகத்தை நேருக்கு நேராகப் பார்க்கவே தைரியமில்லாமல் பார்வையை வேறுபக்கம் திருப்பிக் கொண்டாள்.

சற்றுத் தள்ளியிருந்த மேஜை மீது அவள் பார்வை விழுந்தது. மேஜை மேலிருந்த ரங்க மணியின் படம் அவள் கண்களைச் சுட்டது. அந்தப் படத்தையே வெறிக்கப் பார்த் தாள். பார்க்கப் பார்க்க அதைப் பார்த்த கண்களும், நினைவைச் சுமக்கும் நெஞ்சும் தணலாக எரிந்தன. திடீரென்று திரிவேணி யின் பக்கம் திரும்பி ஏதோ கேட்க நினைத் தாள். ஆனால் வார்த்தை உதட்டோடு நின்று விட்டது. திரிவேணியையும், ரங்கமணியின் படத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''படத்திலிருப்பது யார்....?'' — உதட் டில் தயங்கித் தடுமாறிக் கொண்டிருந்த கேள்வி, வெடித்துச் சிதறி விட்டது. கமல வாசகியையும் மீறி அவள் உதடுகள் கேட்டு விட்டன.

''எந்தப் படத்தில்?'' — திரிவேணி கேட் டாள்.

''மேஜை மீதிருக்கிறதே....''

''ஓ.... அதுவா.....? அவர் சுயேச்சைப் பத்திரிகையில் நிருபர். எங்கள் குடும்பத் துக்கு நெருங்கிய நண்பர்'' என்றாள் திரிவேணி படத்தைப் பார்த்துக் கொண்டு.

'குடும்பத்துக்கு நண்பராமே.... நெஞ்சு அழுத்தக்காரி. குடும்பத்து நண்பரின் படம், இவள் மேஜை மீது ஏன் அலங்காரமாக இருக்க வேண்டும்? காதலன் என்று சொல் லேன்....' — இப்படி கமலவாசகியின் மனம் முணுமுணுத்தது. நல்ல வேளை, வாய்விட்டுச் சொல்லிவிடவில்லை. திரிவேணியின் கண்களை உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வை, திரிவேணியின் விழிகளுக்குள் புகுந்து அவள் இதயத்தையே ஊடுருவி ரங்கமணியை அங்கு தேடுவது போல் இருந்தது.

பைத்தியக்காரி! தன்னுடைய இதயத் தில் அடங்கிக் கிடக்க வேண்டியவனை அடித்து விரட்டிவிட்டு இப்போது இன்னொருத்தியின் இதயத்தில் அவனைத் துழாவித் தேடுகிறாள்.

கமலவாசகியின் கண்கள் கலங்கின. கண்ணீர் பார்வையை மறைத்தது.

''ஏன், வலிக்கிறதா...? விசிறு கிறேனே!'' என்றாள் திரிவேணி, அவளுடைய கண்ணீரைக் கண்டு விட்டு.

''சும்மா இருந்தால் போதும்!'' என்று வெடுக்கென்று கூறிவிட்டுப் படுக்கையில் குப்புற விழுந்து முகத்தைத் தலையணைக் குள் புதைத்துக் கொண்டாள் கமலவாசகி. அவளுடைய போக் குப் புரியாமல் திகைப்புடன்

அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள் திரிவேணி.

திடீரென்று தெருவில் ஆரவாரம் கேட்டது. திரிவேணி, ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். ஒரு பெரிய கூட்டம் அந்தத் தெருவில் கூப்பாடு போட்டுக் கொண்டு நுழைந்தது. திரிவேணியின் வீட்டு வாசலில் கூட்டம் நின்று கொண்டு கூப்பாடு போட்டது. திரிவேணி ஒன்றும் புரியாமல் வெளியே வந்தாள். கூட்டம் அமைதியின்றிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

''எங்கே அந்த ராட்சஸி ? சூப்பரின்டென்டின் மனைவி! அவளை வெளியே கூப்பிடுங்கள்!'' என்று கூட்டத்திலிருந்து ஒருவன் கத்தினான். திரிவேணி திகைத்தாள்.

''ஏன் இங்கே வந்து தொந்தரவு செய்கிறீர்கள்; போங்கள்!'' என்றாள் திரிவேணி.

''சூப்பிரண்டின் மனைவியை வெளியே கொண்டு வாருங்கள். அவள்தான் சுடச் சொன்னாள். பழிக்குப் பழி!'' என்று கூட்டத்திலிருந்து பலர் கத்தினார்கள். திரிவேணி செய்வதறியாது திகைத்தாள்.

''பேசாமல் கலைந்து போங்கள். வீட்டுக்குள் யாரும் நுழையக் கூடாது'' என்றாள் திரிவேணி கண்டிப்புடன்.

''அம்மா, அவளால்தான் இன்று துப்பாக்கிச் சூடு நடந்தது. அதற்குப் பழி வாங்கியே தீர வேண்டும்'' என்றான்ஒருவன்.

''பழி வாங்கவா மகாத்மாகாந்தி உங்களைச் சத்தியாக்கிரகம் செய்யச் சொன்னார் ? கதர் உடை அணிந்திருக்கிறீர்களே, இப்படிப் பேச வெட்கமாயில்லையா?'' என்று சீறி விழுந்தாள் திரிவேணி. பேசியவன் தலை குனிந்து கொண்டு நின்றான். கூட்டத்தில் அமைதி நிலவியது. அனைவரும் மந்திரத்துக்குக் கட்டுண்டவர்களைப் போல் திரிவேணியையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

''அமைதியாகக் கலைந்து செல்லுங்கள்'' என்றாள் திரிவேணி.

இந்தச் சமயத்தில் போலீஸ் லாரி ஒன்று அங்கு வரவே, கூட்டத்தில் சலசலப்புத் தோன்றியது. லாரி கூட்டத்துக்குள் நுழைந்து திரிவேணியின் வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து சப் இன்ஸ்பெக்டர் இறங்கித் திரிவேணியிடம் ஓடி வந்தார்.

வீட்டுக்குள்ளிருந்தவாறு ஜன்னல் கதவு இடுக்கு வழியாக வெளியில் நடந்த சம்பவங்களைக் கவனித்துக் கொண்டிருந்த கமலவாசகி, சப் இன்ஸ்பெக்டரைக் கண்டதும் தைரியமாக வெளியே வந்தாள். அவளைக் கண்ட கூட்டம் மீண்டும் அமைதியிழந்து கத்தத் தொடங்கியது. திரிவேணி கையமர்த்திக் கூட்டத்தினரை அமைதிப்படுத்தினாள். கமலவாசகியைக் கண்டதும் சப் இன்ஸ்பெக்டரின் முகம் மலர்ந்தது.

''ஐயா, உங்களைக் கூட்டி வரச் சொன்னார்கள்'' என்று கமலவாசகியிடம்சொன்னார்.

''ஜாக்கிரதையாகக் கூட்டிச் செல்லுங்கள்'' என்றாள் திரிவேணி. திடீரென்று கூட்டத்தில் சலசலப்பு ஏற்படவே திடுக்கிட்டுத் திரும்பினாள் திரிவேணி. கூட்டத்தை விலக்கிக் கொண்டு கலவரத்துடன் தீக்ஷிதர் ஓடி வந்தார். திரிவேணியைக் கண்டதும் பொங்கிப் பொங்கி அழுதார். தீக்ஷிதர் அழுவதைக் கண்டு திரிவேணி திடுக்கிட்டு நின்றாள்.

''தீக்ஷிதர்வாள்.... என்ன, என்ன நடந்தது?'' பதற்றத்துடன் கேட்டாள் திரிவேணி. தீக்ஷிதரால் பேச முடியவில்லை. அழுகை தொண்டையை அடைத்தது. விம்மிக் கொண்டே, ''திரிவேணி, உன் அத்தை போய் விட்டாள். குண்டுக்கு இரையாகி விட்டாள்'' என்று கூறிவிட்டு, மேல் துண்டை எடுத்து வாயில் பொத்திக்கொண்டு விம்மினார்.

இதைக் கேட்டுத் திரிவேணி கல்லாகி நின்றாள். ஒரு கணம் எங்கும் நிசப்தம் நிலவியது. திரிவேணிக்குச் சுயநினைவே அற்று விட்டது. பிரமை பிடித்தவளைப் போல் பரக்கப் பரக்க விழித்துக் கொண்டு பரிதாபமாக நின்றாள்.

திடீரென்று கூட்டம் கொந்தளித்தது.

''பழிக்குப் பழி! இரத்தத்துக்கு இரத்தம்!'' என்று வெறி கொண்டு கத்தியது கூட்டம். கூட்டத்தின் இரைச்சலைக் கேட்டுச் சுய நினைவை அடைந்த திரிவேணி பரபரப்புடன் கமலவாசகியின் பக்கம் திரும்பினாள். அவள் திரிவேணியிடம் விடை பெறாமலேயே லாரியை நோக்கி நடந்து கொண்டிருந்தாள். முன்னால் ஒரு போலீஸ்காரனும், பின்னால் சப் இன்ஸ்பெக்டரும், பாதுகாப்பாகச் சென்றார்கள். கூட்டம், கமலவாசகியை நோக்கிச் சாடியது. கமலவாசகி நடுநடுங்கி விட்டாள். பயத்தினால் முகம் வெளிறிவிட்டது. சப் இன்ஸ்பெக்டர் செய்வதறியாது திகைத்து நின்றார். அந்தச் சமயத்தில் கூட்டம் வெறி கொண்டு எந்தச் செயலிலும் இறங்கிவிடும் என்ற பயத்தினால் இன்ஸ்பெக்டரே மனம் பதைத்து நின்றார். கமலவாசகியை அந்த இடத்திலேயே அழித்துவிட முயல்வது போல் சீறிக் கொண்டு அவளை நெருங்கிய கூட்டத்தைக் கண்டு திரிவேணி திடுக்கிட்டாள்.

எப்படித்தான் அவளுக்கு அவ்வளவு துணிவு வந்ததோ! திடீரென்று பாய்ந்து சென்று கமலவாசகிக்கும், கூட்டத்துக்கும் இடையே போய் இரண்டு கைகளையும் அகல விரித்துக் கொண்டு கமலவாசகியைக் காப்பாற்றுவது போல் நின்றாள். கோழிக் குஞ்சைத் தாய்க் கோழி, ஆபத்துச் சமயத்தில் இறக்கைகளை விரித்து மறைத்துக் கொள்வதுபோல் இருந்தது அவள் செய்கை. அவளுடைய கண்கள் கோபத்தால் சிவந்தன. கூட்டத்தைப் பார்வையாலேயே எரித்துவிடுபவளைப் போல் முறைத்துப் பார்த்தாள்.

''யாரும் இவர்களைத் தீண்டக் கூடாது. அப்படியே நில்லுங்கள்.....'' என்று சீற்றத்தோடு இரைந்து கூவினாள். திரிவேணியின் கோபத்தைக் கண்டு கூட்டம் ஸ்தம்பித்து விட்டது. கமலவாசகியை நெருங்கியவர்கள் மேலும் நகராமல், நின்ற இடத்திலேயே மந்திரத்துக்குக் கட்டுப்பட்டவர்களைப் போல் நின்று விட்டார்கள். கமலவாசகி, லாரியினுள் ஏறியதும், லாரி உறுமிக் கொண்டு புழுதியைக் கிளப்பிக் கொண்டு புறப்பட்டது.

லாரி சென்று மறைந்ததும் திரிவேணி கூட்டத்தைப் பார்த்து, ''அமைதியாகக்

# இலவசம்

**சிந்தால் டாய்லெட்
பவுடரின் விலையில்
35 பைசா மிச்சம்**

பிடிக்க உதவும்
ஒரு கூப்பன்

CINTHOL




வாடை அகற்றும் மேனியழகு சோப்பாகிய
ஒவ்வொரு சிந்தால் சோப்பின் மேலுறைக்குள்ளும்
ஒரு விசேஷக் கூப்பன் உள்ளது—அதைக்
கொடுத்து சிந்தால் டாய்லெட் பவுடர் (லார்ஜ்,
பேமிலி, அல்லது எகானமி சைஸ்) எந்த ஒரு
டப்பா வாங்கினாலும் உங்களுக்கு
35 பைசா மிச்சமாகும்.
மென்மணமூட்டப்பட்ட சிந்தால் சோப்பிலும்,
டாய்லெட் பவுடரிலும், விசேஷ அழகுசாதனப்
பொருளாகிய ஜி11 (ஹெக்ஸாக்ளோரோபீன்)
அடங்கியுள்ளது.

**சிந்தால் சோப் அதிக நாள் நீடித்துழைக்கும்,
சிக்கனமாக பயன் தரும்.
நாள்முழுதுக்குமான புத்துணர்ச்சிக்கு
இருமடங்கு உறுதிபெறவே.**

INTERPUB/GC 7 TM

# காலம் யாருக்காகவும் காத்திருக்காது

...உங்கள் அன்புச் செல்வங்களின் சிறந்த எதிர்காலத்திற்கு ஆவன செய்யும் மிக முக்கியமான விஷயத்தில் இந்தக் கூற்று நூற்றுக்கு நூறு பொருந்தும் என்பதில் சந்தேகமில்லை. எனவே, இந்த விஷயத்தில் ஆவன செய்யத் தாமதிக்காதீர்கள். காலம் யாருக்காகவும் காத்திருக்காது. வாழ்க்கை அநித்தியமானது. அவர்களை காலத்தின் தாக்குதல்களைச் சமாளிக்க சக்தியின்றி திண்டாட விட்டுவிடாதீர்கள். இன்றே உயில் எழுதி வையுங்கள். உங்கள் சொத்துக்கள் எவையாயினும், எவ்வளவாயினும் —



கனரா பாங்க், மகிழ்ச்சியுடன் உங்கள் எக்ஸிக்யூடராகவோ, டிரஸ்டியாகவோ இருக்கத் தயார். இவ்வாறாக உங்கள் அன்புச் செல்வங்களின் எதிர்காலம் சிறப்பாகவும், நிலையாகவும் இருப்பதை உறுதி செய்து கொள்ளலாம். ஏற்கனவே இப்படிச் செய்யவில்லையென்றால், இன்றே கனரா பாங்குக்கு விஜயம் செய்யுங்கள்—தாமதிக்காதீர்கள்—காலம் யாருக்காகவும் காத்திருப்பதில்லை.

திரவிய சாதனங்கள் ரூ.123 கோடிக்கு மேல்

கிளைகள் 240க்கு மேல்

உலகெங்கும் பிரதிநிதிகள்

## கனரா பாங்க் லிமிடெட்

பதிவுபெற்ற அலுவலகம்: லைட்ஹவுஸ் ஹில், மங்களூர். கிளை அலுவலகம்: 112, ஜெயசாமராஜேந்திர ரோடு, பெங்களூர்.

SISTA'S-CB-21 TAM

கலைந்து செல்லுங்கள். தயவுசெய்து அமைதியாகப் போங்கள்'' என்று கூறிவிட்டு வீட்டு வாசற்படியில் ஏறினாள். அவளால் ஏற முடியவில்லை. மனத்தை அழுத்திய துக்கம் அவள் உடலையே பாரமாக அழுத்தியது. தட்டுத் தடுமாறி வீட்டுக்குள் நுழைந்து, கட்டிலில் போய்க் குப்புற விழுந்தாள். அழுகையை அடக்க முடியவில்லை. ஓவென்று கதறி அழுதாள். தீக்ஷிதருக்கு அவளைச் சமாதானப் படுத்தத் தெரியவில்லை. பாவம், அவரும் சேர்ந்து கண்ணீர் வடித்துக்கொண்டு நின்றார்.

போலீஸ் லாரி, சிவானந்தத்தின் பங்களா காம்பவுண்டுக்குள் நுழைந்தபோது, பங்களாவுக்குள் பலர் கூடியிருந்ததைக் கண்டாள் கமலவாசகி. லாரி நின்றதும், பரபரப்புடன் இறங்கி வீட்டினுள் விரைந்தாள். முன்னறையிருந்த விசாலமான அறையில் பலர் கூடியிருந்தார்கள். ஒரு கட்டிலுக்குப் பக்கத்தில் சிவானந்தம் நின்று கொண்டிருந்ததைக் கண்ட பிறகுதான் அவள் மனப் பாரம் இறங்கியது. சிவானந்தத்துக்கு ஒன்றுமில்லை என்பதை உணர்ந்ததும் ஒரு நீண்ட பெருமூச்சு வெளிவந்தது.

ஆனால் சிவானந்தம் கட்டிலுக்குப் பக்கத்தில் கண்களில் நீருடன் நிற்கிறானே, ஏன்....?

விவரம் தெரியாமல் மனம் குழம்பினாள். உள்ளுக்குள் ஏதோ பயம் அரிக்கத் தொடங்கியது. மனக் கலக்கத்துடன் கட்டிலை நெருங்கியதும் திடுக்கிட்டாள்.

கட்டிலில் வெங்கு படுத்துக் கிடந்தான். அவன் மார்பில் கட்டுப் போடப்பட்டிருந்தது. கட்டிலருகில் பாய்ந்து சென்று அவனை உற்றுப் பார்த்தாள். வெங்கு கண்களை மூடிக் கிடந்தான். கமலவாசகியின் வயிற்றில் ஏதோ இறுகப் பிசைவது போன்ற ஓர் உணர்ச்சி. பயத்தால் அவள் உடல் நடுங்கியது. சிவானந்தத்தை நிமிர்ந்து பார்த்தாள். அவன் வெங்குவைப் பார்த்துக் கண்ணீர் சிந்தியபடி நின்றான். வெங்கு இறந்து விட்டான் என்பதை உள்ளுணர்வு கூறியதும் கமலவாசகி நிற்கக்கூடச் சக்தியற்றுக் கட்டிலுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்து முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள். அவளுடைய அழுகைக் குரலைக் கேட்டதும் சிவானந்தம் அந்த அறையை விட்டு வெளியே வந்து வராந்தாவில் கிடந்த சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டான். அவன் நெற்றியில் கட்டுப் போட்டிருந்தது. காயம் பட்ட இடத்தில் விண் விண் என்று வலித்துக் கொண்டிருந்தது. சிவானந்தத்துக்கு ஆற்றாமை தாளவில்லை.

போயும் போயும் இந்த அப்பாவி மீதா குண்டு பாயவேண்டும்? இந்தப் பித்துக்குளிக்கு எப்படி இவ்வளவு உணர்ச்சியும், வீரமும் வந்தது? பாவம், குழந்தை மாதிரி வெள்ளை மனத்தோடு திரிந்து வந்தானே .....

சிவானந்தம் ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டான். சற்றுத் தூரத்தில் நின்ற இரகசியப் போலீஸ்காரர் ஒருவரைக் கூப்பிட்டான். அவர் விரைந்து வந்து ஒரு 'சல்யூட்' அடித்து விட்டுப் பவ்வியமாக நின்றார்.




"என்னப்பா இது? துணி மூட்டை மாறிடுச்சா? ஐந்து வேட்டிகள்தானே சலவைக்குப் போட்டேன்? இதுலே நாலு வேட்டியும், இரண்டு துண்டும் வச்சிருக்கியே?"

"இல்லே சார்! உங்க ஒரு வேட்டிதான் இரண்டு துண்டாகி விட்டது! அதிகப்படி உருப்படிக்கு நீங்க சார்ஜ் தரவேண்டாம்!"

"நீங்களெல்லாம் அங்கிருந்துமா அவனைச் சாக விட்டீர்கள்?'' — மிகுந்த துயரத்துடன் கேட்டான் சிவானந்தம்.

"நான் இதை எதிர்பார்க்கவேயில்லை. திடீரென்று போலீஸ் கடும் சப்தம் கேட்ட போது நானே திகைத்து விட்டேன். மொத்தமே மூன்று தடவைகள்தான் சுட்டார்கள்'' என்றார் இரகசியப் போலீஸ்காரர்.

"என்ன நடந்தது?''

"தீக்ஷிதரை ஒரு போலீஸ்காரர் குறிபார்த்தார். அப்போது தீக்ஷிதர் கூட்டத்தை அமைதிப் படுத்துவதில் முனைந்திருந்தார். தீக்ஷிதர் மீது குறி வைப்பதை வெங்குபார்த்து விட்டான். உடனே பாய்ந்து தீக்ஷிதரின் முன்னால் போய் நின்று அவரை வேறு பக்கம் பிடித்துத் தள்ளினான். அதே சமயம் போலீஸ்காரர் சுடவே, குண்டு வெங்கு மீது பட்டுவிட்டது. வெங்கு மட்டும் இல்லையென்றால், தீக்ஷிதர் பலியாகியிருப்பார்'' என்றார் போலீஸ்காரர்.

"தனிப்பட்டவர்களையா குறிபார்த்துச் சுடுவது? கூட்டத்தைக் கலைக்க வேண்டியது தான் நம்முடைய வேலையே தவிர, இப்படியா இரத்த வெறிபிடித்து அலைவது? மிருகங்கள்!'' என்று வெறுப்புடன் கூறினான் சிவானந்தம்.

"நல்ல வேளை, நீங்கள் மயக்கம் தெளிந்து உடனே எழுந்து வந்து சுடுவதை நிறுத்தும்படி உத்தரவிட்டீர்கள். இல்லையென்றால் இன்னும் சுட்டிருப்பார்கள்'' என்றார் போலீஸ்காரர். பிறகு கூட்டத்தை நோக்கிக் கமலவாசகி கடும்படி தாண்டியதையும், அவள் தலையில் காயம் பட்டதையும் விவரமாகச் சொன்னார். அப்போது அடுத்த அறையில் ஃபோன் மணி அடித்தது. போலீஸ்காரர் விரைந்து சென்று

ஃபோனை எடுத்துப் பேசிவிட்டுத் திரும்பி வந்தார்.

''மதுரையிலிருந்து டி. ஐ. ஜி. துரை சாயங்கால ரயிலில் வருகிறாராம்'' என்றார்.

''சரி, சரி. மயானத்தில் ஆகவேண்டியதற்கானவைகளைச் சீக்கிரம் கவனி'' என்றான் சிவானந்தம்.

மத்தியானம் சிவானந்தம் மயானத்திலிருந்து திரும்பிய போது வெங்கு படுத்திருந்த கட்டில் பக்கத்திலேயே கமலவாசகி உட்கார்ந்து அழுது கொண்டிருந்தாள். கட்டில் காலியாகக் கிடந்தாலும் அதில் வெங்கு படுத்திருப்பது போல் சிவானந்தத்துக்குப் பிரமை தட்டியது. சிறிது நேரம் கலங்கிய கண்களுடன் கட்டிலேயே உற்றுப் பார்த்தான். கமலவாசகி விம்முவது காதில் விழுந்தது. அவளைப் பார்க்கக்கூடப் பிடிக்காமல் உள் பக்கம் போக நினைத்தவன் ஒரு கணம் வாசற் பக்கம் நின்று அவளைப் பார்த்தான்.

''ஏன் அழுகிறாய்? நீதானே சுடும்படி தூண்டினாய்? சந்தோஷப்படு'' என்றான் எரிச்சலுடன்.

''எல்லாம் உங்களால்தான்'' என்று சீறினாள், கண்களைத் துடைத்துக் கொண்டே.

''நான் இல்லையென்றால் எத்தனை பேர்கள் பலியாகி இருப்பார்களோ? உன்னுடைய அவசர புத்தியால் இரண்டு பேரை பலி வாங்கி விட்டாய்'' என்று கோபத்தில் இரைந்தான்.

''உங்களுடைய கோழைத்தனமும் கையாலாகாத்தனமும்தான் இத்தனைக்கும் காரணம். ஊர்வலத்தை ஆரம்பத்திலேயே தடுத்திருந்தால், இப்படி நடந்திருக்குமா?'' என்றாள் கமலவாசகி. அவள் குரலில் வெறுப்புக் கொப்பளித்தது.

''ஊர்வலத்தை அதன் போக்கில் விட்டிருந்தால் ஒன்றும் நடந்திருக்காது. போயும் போயும் இன்ஸ்பெக்டர், உன் சொல்லைக் கேட்டார் பார்; அதன் விளைவுதான் இது.''

''இல்லையென்றால், கூட்டம் நம்மை உயிரோடு விட்டிருக்காது, தெரியுமா?''

''நீ என்னோடு வந்ததுதான் தப்பாகிவிட்டது. ஒன்றும் தெரியாத பித்துக்குளிப் பயல், தீக்ஷிதரின் உயிரைக் காப்பாற்றத் தன் உயிரையே தியாகம் செய்து விட்டான். அவனுடைய கால்தூசிக்குக்கூட நீ ஈடாகமாட்டாய். அவனுக்காக அழக்கூட உனக்கு அருகதை கிடையாது'' என்று இரைந்து கத்தி விட்டு வெறுப்புடன் அடுத்த அறைக்குள் நுழைந்து விட்டான் சிவானந்தம். கமலவாசகி வெகு நேரம் அழுது கொண்டிருந்தாள். தலையிலிருந்த காயத்தின் வலியைவிட மனத்தில் குத்திக் கொண்டிருந்த துக்கத்தின் வலிதான் அவளை வதைத்துக் கொண்டிருந்தது.

மாலையில் சிவானந்தம் மதுரையிலிருந்து வரும் மேல் அதிகாரியை வரவேற்க ரயில்வே ஸ்டேஷனுக்குப் புறப்படும் போதுகூட, கமலவாசகி அந்தக் கட்டிலின் பக்கத்தில்தான் இருந்தாள். அவளைக் கவனியாதவன் போல் காரில் ஏறிச் சென்று விட்டான் அவன்.

ஃ ஃ ஃ

திருநெல்வேலி ரயில்வே ஸ்டேஷனுக்குள் ரயில் வண்டி வந்து நின்றதும், சன்னல் வழியாகத் தலையை வெளியே நீட்டி எட்டிப் பார்த்தான் ரங்கமணி. போலீஸ்காரர்களின் நடமாட்டம் அதிகம் இருந்தது. பிளாட்பாரத்தில் வழக்கமாகத் தென்படும் கூட்டம் இல்லை. ரங்கமணி பிளாட்பாரத்தில் இறங்கி நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த சிவானந்தத்தின் பார்வை, ரங்கமணி மீது விழுந்தது. இருந்தாலும் சிவானந்தம் கவனியாததுபோல் இருந்து விட்டான். கண்டவுடன் கலகலப்பாகப் பேச வரும் சிவானந்தம் அப்போது பாராமுகமாக இருந்தது ரங்கமணிக்கு வியப்பை அளித்தது. சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த சோமு ரங்கமணியிடம் விரைந்து வந்தான்.

''என்ன சோமு, ஏதாவது விசேஷம் உண்டா....? எல்லா இடத்திலும் புரட்சி பரவி விட்டதே! நம்முடைய ஊர் எப்படி இருக்கிறது?'' என்று ஆவலோடு கேட்டான் ரங்கமணி.

''இங்கேயும் ஏதோ நடந்திருக்கிறது!'' என்று சுவாரசியமில்லாமல் முனகி விட்டு, ரங்கமணியின் பெட்டியையும் படுக்கையையும் ரயில் வண்டியிலிருந்து இறக்குவதில் ஈடுபட்டான் சோமு.

இருவரும் ஒரு குதிரை வண்டியில் அச்சகத்துக்குப் புறப்பட்டார்கள். வண்டி, கடைத்தெரு பக்கம் வந்த போது, ரங்கமணி வியப்படைந்தான். ஒரு கடைகூடத் திறக்கப் படவில்லை. தெரு முழுவதும் வெறிச்சென்று மயான அமைதி குடிகொண்டிருந்தது.

''பரவாயில்லையே! திருநெல்வேலியும் தன்னுடைய பங்குக்குப் புரட்சி செய்து விட்டதே!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினான் ரங்கமணி. அந்தச் சமயத்தில் சிவானந்தத்தின் கார் குதிரை வண்டியைக் கடந்து சென்றது.

''சிவானந்தம் இங்கே வந்திருக்கிறாரே, ஏனோ?'' — ரங்கமணி கேட்டான்.

''சண்டாளன் எதற்கு வந்தானோ, யார் கண்டது?'' என்று வெறுப்புடன் கூறினான் சோமு.

''அவரை ஏன் ஏசுகிறாய்? என்ன நடந்தது?'' என்று பரபரப்புடன் கேட்டான் ரங்கமணி.

''காலையில் நடந்த ஊர்வலத்தில் போலீஸ் துப்பாக்கியால் சுட்டது.''

''ஆ.... சேதம் அதிகமா?'' — பதறிப் போய்க் கேட்டான் ரங்கமணி. திடீரென்று ஏதோ ஞாபகம் வரவே, ''திரிவேணி சௌக்கியந்தானே?'' என்று கேட்டுவிட்டுப் பயத்துடன் சோமுவை வெறிக்கப் பார்த்தான்.

'சௌக்கியந்தான்' என்பது போல் தலையை ஆட்டினான் சோமு. பிறகுதான் ரங்கமணியின் மனம் அமைதியடைந்தது.

வண்டி அச்சகத்தை அடைந்ததும், வாசலில் பெரிய பூட்டு தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டான் ரங்கமணி.

''என்ன, அச்சாபீஸ் சத்தியாக்கிரகத்தில் இறங்கி விட்டதா....? எல்லாரும் எங்கே?'' என்று ஆவலுடன் கேட்டான்.

''எல்லாரும் சர்தார் வீட்டுக்குப் போயிருக்கிறார்கள்'' என்றான் சோமு.

''ஏன்?''

# பலனைப் பொறுத்தவரை எல்லா தலைவலி மாத்திரைகளும் ஒன்றுதான் என்பது உங்கள் எண்ணமானால் நீங்கள் அவேதன் சாப்பிட்டுப் பார்த்திருக்க மாட்டீர்கள்



**அற்புத 'எபேப்'* அடங்கிய அவேதன் துரிதமாக, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது**

'எபேப்' அடங்கியிருபபதனால், அவேதன், நோவுகளையும், வலிகளையும் உடனடியாக விரட்டி யடிக்கும் விசேஷ குணத்தைப் பெற்றிருக்கிறது. அவேதனில் அடங்கியுள்ள 'எபேப்' சில நிமிடங்களில் செயல் புரிகிறது—உடனடியாக நிவாரண மளிக்கிறது! அவேதன், ஒரு விதமான தீமையு மற்ற தலைவலி மாத்திரையாகத் திகழ்வதற்குக் காரணம் 'எபேப்'தான்—இதனால் கெடுதலான விளைவுகள் எதுவும் ஏற்படுவதில்லை. துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணததிற்கு—அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன்!

**தலைவலி, பல்வலி, முதுகுவலி, தசை-நார்களில் வலி, ஜலதோஷம், ஃப்ளூ முதலியவற்றிலிருந்தும், இதர சாதாரண வலிகள் மற்றும் நோவுகளிலிருந்தும், பெண்களின் அசௌகரியமான தினங்களிலும், துரித நிவாரணம் பெற,**




# அவேதன்®

**சாப்பிடும்படி டாக்டர்கள் சொல்லுவதில் வியப்பென்ன !**

சாப்பிடும் அளவு: 1—2 டேப்லெட்டுகள்

* என்-அஸெடைல்-பி-அமினோஃபெனால்

SQUIBB ஸாராபாய் கெமிகல்ஸ்

® இ. ஆர். ஸ்க்விப் & ஸன்ஸ் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க். காம்சந்த் பிரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க லைசென்ஸ் பெற்றவர்கள்.

Shilpi SC. 46/67 A Tam.



நீதிபதி: என்னப்பா! திரும்பத் திரும்ப நீ இந்தக் கோர்ட்டுக்கு வந்து கொண்டிருக்கிறாய்! அவமானமாக யில்லையா?

கைதி: தினமும் கோர்ட்டுக்கு வரும் நீங்களே இப்படிப் பேசலாமுங்களா? 'கண்டெம்ப்ட் ஆப் கோர்ட்' ஆவாதுங்களா?

---

''அப்புறம் சொல்லுகிறேன்'' என்று கூறி விட்டு வாசற் கதவில் தொங்கிய பூட்டைத் திறந்தான் சோமு. பெட்டியையும் பையையும் அச்சாபீசுக்குள் எடுத்து வந்து இரகசிய அறைக்குள் வைத்துப் பூட்டிவிட்டு வெளியே வந்தார்கள். வாசற் கதவை மீண்டும் பூட்டினான் சோமு. பிறகு இருவரும் வண்டியில் சிந்துபூந்துறையை நோக்கிச் சென்றார்கள்.

''சர்தார் வீட்டில் என்ன விசேஷம் ?'' ரங்கமணி கேட்டான்.

''காலையில் ஊர்வலம் நடந்தது....''

''ஆபத்து ஒன்றும் இல்லையே ?'' ரங்கமணியின் குரல் நடுங்கியது. சோமு என்ன சொல்லப் போகிறானோ என்ற பயத்தில் சோமுவை வெறிக்கப் பார்த்தான்.

''குண்டு அத்தையின் தலையைத் தாக்கி விட்டது. காலையிலேயே இறந்து விட்டார்கள். உனக்காகத்தான் எல்லாரும் காத்திருக்கிறார்கள்'' என்றான் சோமு.

ரங்கமணி பிரமை பிடித்தவன் போல் பரக்கப் பரக்க விழித்தான். அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளிவரவில்லை. அதிர்ச்சியால் அவன் மூளையே ஸ்தம்பித்து விட்டது. உள்ளத்தில் கொந்தளித்த உணர்ச்சிகளெல்லாம் முகத்தில் நிழலாடின.

வண்டி, தெருவின் மூலையில் திரும்பிய போது சொக்கலிங்கம் பிள்ளையின் வீட்டு முன்னால் பெரிய கூட்டம் கூடியிருப்பதைக் கண்டான் ரங்கமணி. திடீரென்று வண்டியிலிருந்து கீழே குதித்துத் தலைதெறிக்க வீட்டை நோக்கி ஓடினான். கூட்டத்தை விலக்கிக் கொண்டு வீட்டுக்குள் புகுந்து முன் அறையில் நுழைந்த ரங்கமணி, கட்டிலில் அத்தை கிடப்பதைக் கண்டதும் அப்படியே சிலையாக நின்றுவிட்டான். சிறிது நேரம் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அத்தை இறந்துவிட்டாள் என்பதை அவளால் நம்பவே முடியவில்லை. அத்தையின் தலைப்பக்கத்தில் உட்கார்ந்திருந்த திரிவேணி கண்ணீர் முட்டிய கண்களுடன் தலை நிமிர்ந்து ரங்கமணியைப் பார்த்தாள். அவனைக் கண்டதும் பொங்கி வந்த அழுகையை அடக்க முடியாமல் முகத்தை மூடிக்கொண்டாள். ரங்கமணி, அத்தையின் காலடியில் அயர்ந்து உட்கார்ந்து விட்டான்.

அவனுடைய நினைவில் பல ஆண்டுகளுக்கு முன் சென்னை வீதியில் நடந்த தடியடிப் பிரயோகம் காட்சியளித்தது. அந்த நினைவால் அவன் இரத்தம் கொதித்தது.

அத்தையை உற்றுப் பார்த்தான். அவள் நெற்றியிலிருந்து வழிந்த இரத்தம் காய்ந்து நெற்றியிலேயே ஒட்டி யிருந்தது.

அந்த வீட்டுக்கு அவன் வந்த நாள் முதல் நடந்த சம்பவங்கள் அனைத்தும் நினைவில் படர்ந்தன. திடீரென்று அநாதையாகி விட்டவனைப் போன்ற உணர்வு தோன்றியது. தாங்க முடியாத வேதனை இதயத்தைக் கவ்விக்கொள்ளவே அத்தையின் கால்களைப் பற்றிக் கொண்டு விம்மினான். அவன் தோள்களைப் பற்றித் தூக்கினார் சர்தார். அவரை நிமிர்ந்து பார்த்தான். அவருடைய கண்களும் கலங்கியிருந்தன. ரங்கமணியைத் தோளைப் பற்றி அணைத்தவாறு வராந்தாவுக்கு அழைத்து வந்தார். அவருடைய தோளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழுதவாறு நடந்தான் ரங்கமணி.

அத்தைக்கும் ரங்கமணிக்கும் இடையில் முளைத்த பாசப் பிணைப்பை சர்தார் நன்கு உணர்ந்திருந்தார். யாருடைய சொல்லுக்கும் அடங்காத ரங்கமணி, அத்தையின் அன்புக்குக் கட்டுப்பட்டுக் கிடந்ததைப் புரிந்து கொண்டிருந்தார்.

''நீ என்ன குழந்தையா அல்லது பெண் பிள்ளையா?... இப்படியா அழுவார்கள்?'' என்று கூறி அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தார் சர்தார்.

''யாரை இனி அம்மா என்று கூப்பிடுவேன்....'' என்று கதறினான் ரங்கமணி. அவனுடைய கண்ணீர் சர்தாரையே கலங்க வைத்துவிட்டது.

''ரங்கமணி, இந்தப் பாரத நாடுதான் உன் தாய். அவளைக் காப்பாற்ற முனைந்திருக்கும்போது இதற்கெல்லாமா மனம் தளர்வது? இது மாதிரி இன்னும் எத்தனையோ சோதனைகள் ஏற்படலாம். மனத்தைத் தளரவிடாதே...அழாதே, கண்களைத் துடைத்துக்கொள்...'' என்ற சர்தார், ''உன் அப்பா சாமிநாதனுக்கு நேர்ந்ததை விடவா! இதையெல்லாம் கண்டு உன் மனம் இறுக வேண்டும். இப்படிப் பெண்ணைப்போல் அழுது கொண்டிருக்கிறாயே!'' என்று தேற்றினார்.

ரங்கமணி கண்ணீரைத் துடைத்துக் கொண்டு சர்தாரை நிமிர்ந்து பார்த்தான்.

''இதற்குப் பழிவாங்கியே தீரவேண்டும்'' என்றான் ஆவேசத்துடன்.

''பொறு. அரசரப்படாதே. எதையும் ஒரு திட்டத்தோடுதான் செய்ய வேண்டும்'' என்று அவன் முதுகைத் தட்டிக்கொண்டே சொன்னார் சர்தார். **(தொடரும்)**



ஆரஞ்சொன்னா ஆஹாஹா
பாரமில்லே ஓஹோஹோ
அன்பார் சொன்னா ஆஹாஹா
துன்பமில்லே ஓஹோஹோ
அதைப் போல ஆஹாஹா
லருவுமில்லே ஓஹோஹோ
ஆரக்கார அண்ணமாரே
ஆரத்தையும் ஒத்துக்கைவா.




இப்படியோர் அருமையான தமிழ் நாடோடிப் பாடலைக் கேட்கிறீர்கள்! எங்கே? சுந்தரத் தெலுங்கு இசைக்கும் ஆந்திர நாட்டில் ஸ்ரீசைலம் க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் பிரமராம்பிகை அம்மன் பிராகாரத்தைச் சுற்றி வருகையில் இந்தக் கோஷ்டிகானம் நம்மைக் கவர்ந்து இழுக்கிறது. பாரமான கல்தூண் ஒன்றை வலிய தோள்கள் 'ஆரம்' சொன்னபடி நகர்த்திக் கொண்டிருக்கின்றன. ஆங்காங்கு உளியடிக்கும் ஒலி. அவ்வளவு பேரும் தமிழ் நாட்டுச் சிற்பிகள்.

ஆந்திரத்துக்கும் தமிழ்ச் சிற்பிகளுக்கும் என்றும் தொடர்பு உண்டு. ஆந்திர சர்க்காரின் ஆஸ்தான ஸ்தபதி யார், தெரியுமா? தென்னகத்து ஸ்ரீ கணபதி அவர்கள். அவரது சகோதரர் தேவகோட்டை திரு முத்தையன் ஸ்தபதிதான் ஸ்ரீசைலம் கற்றளி வேலைகளைக் 'காண்ட்ராக்ட்' எடுத்துக் கொண்டு நிர்வகித்து வருகிறார்.

மூன்று வருடங்களாக சுமார் நூறு சிற்பிகள் குடும்பத்தோடு ஸ்ரீசைலத்தில் வசித்து வருகிறார்கள். அம்மன் கோயில் சுத்த விமானம் இவர்கள் நிர்மாணித்தது. மல்லிகார்ஜுன ஸ்வாமி கோயில் முக மண்டபத்துக்கு மேல் மூன்று திசைகளைப் பார்த்தபடி உயிர்க் களையுடன் விளங்கும் வெண் சுதைச் சிற்பங்களான தக்ஷிணாமூர்த்தி, பிக்ஷாடனமூர்த்தி, கிராதார்ஜுன மூர்த்தி, நடராஜ தாண்டவம் முதலியன இவர்களது கைவண்ணங்கள்.

சுவாமி சந்நிதிக்குப் பின்புறம் அம்மன் கோயில் அமைந்திருக்கிறது. தற்போது அம்மன் கோயிலுக்கு 75 அடி உயரத்தில் ஐந்து 'அந்தஸ்து' கொண்ட மேற்கு ராஜ கோபுரம் ஒன்று நிறுவும் பணியில் ஈடுபட்டுள்ளார்கள், நமது சிற்பிகள்.

''கோபுரப் பணிக்குரிய கற்கள் இங்கு அகப்படுகின்றனவா?'' என திரு முத்தையாவை வினவினேன்.

''இங்கேயே அகப்படுகின்றன. எல்லாக் கற்களும் பயன்படா. கருவாரம், செந்நாரை, புள்ளிகள் கூடாது. தேவைக்குத் தக்கபடி வசம் பார்த்து வெட்டுவோம்.



வேண்டிய வடிவங்களை முதலில் கரிப் பென்சில்களால் வரைந்து, பின்னர் செதுக்குவோம்'' என்றார் முப்பது வயதுக்குள் தொழிலனுபவம் பெற்றுவிட்ட முத்தையா.

''அதற்கா இவ்வளவு கரி இங்கே?''

''இல்லை. இது உளி காய்ச்சி அடிப்பதற்கு. எங்கள் வேலையே உளி நுனியில்தான் இருக்கிறது. வெட்டுமுனை உளி, கூச்சமுனை உளி, வளைக உளி, பலமுனை உளி என்று உளிகளில் பல தினுசுகள் உண்டு. அடிக்கடி கூர்மை தேய்ந்துவிடும். இந்த உளிகளைப் பழுக்கக் காய்ச்சி முனை அடிக்க வேண்டும். அதற்காக இரண்டு பேர். தினம் இரண்டு மூட்டை கரி செலவாகிறது!''

''சிற்ப சாஸ்திரம் எங்கு கற்றீர்கள்?''

''நாங்கள் பரம்பரைச் சிற்பிகள். நான் மகாபலிபுரம் சிற்பப் பள்ளியில் கற்றேன். சிற்பிகளில் எத்தனையோ படிகள். வர்த்தகி என்பவன் சேர்மானம் செய்பவன்; தக்ஷகன் வர்க்கம் முதலியன செய்பவன்; சூத்திரக்கிராகி உதவி ஸ்தபதி என்று சொல்லலாம். ஸ்தபதிக்குச் சகல ஞானமும் வேண்டும். எல்லாச் சிலைகளையும் வடிக்கத் தெரிய வேண்டும். சிற்ப நூல்களில் வாஸ்துவின் பிரிவுகள், சங்குஸ்தாபனம், விமான இலக்கணம், பிரகார நிர்மாணம், அரண்மனை நிர்மாணம், இரதங்கள், படிம அளவுகள், கண் திறத்தல் என்று எத்தனையோ விஷயங்கள் அடங்கியுள்ளன'' என்று கூறி முத்தையன் சில சிற்ப நூல்களை எடுத்துக் கொண்டு வரச் செய்து சில பகுதிகளைப் படித்துக் காண்பித்தார். அவ்வளவும் சம்ஸ்கிருத சுலோகங்கள்.

''பலருக்குத் தெரியாது, சிற்பிகளின் வடமொழி ஞானம். சிற்பிகளின் பெருமையை உணர்ந்து எடுத்துரைத்த மகான் ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவாள். அவர்களது திருக்கருணையினாலே எங்களுக்கு மதிப்புப் பிறந்திருக்கிறது. ஸதஸில் நாங்கள் பங்கு கொண்டு விவாதித்துப் பயன் பெறுகிறோம்'' என்று நன்றியுணர்ச்சியுடன் பேசினார்.

''உங்களுக்கு இங்கு எல்லாம் சௌகரியமாக இருக்கிறதா? ஊரை விட்டு ஊர் வந்ததில்....''

''நாங்கள் எங்கள் குடும்பத்துடனேயே வந்துவிட்டோம். அவ்வப்போது ஒருசிலர் ஊர்ப்பக்கம் போய் வருகிறார்கள்.''

''ஒரு விஷயம் கேட்கலாமா? இவ்வளவு பாரமான கற்களை ஏற்றி இறக்கிக் காரியம் நடக்கிறதே. இதுவரை ஏதாவது விபத்து ஏற்பட்டிருக்கிறதா?''

''மல்லிகார்ஜுன ஸ்வாமி புண்ணியத்தில் இல்லை. அதற்குத்தான் ஆரம்பத்தில் சில பலி கர்ம விதிகளை நடத்தி விடுகிறோம்.''

''ஆந்திர நாட்டில் தமிழ்ச் சிற்பிகள் தொண்டு செய்து ஏற்றம் விளைவிப்பதைக் கண்டு பெருமை அடைகிறேன்'' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டேன்.

அப்பர், சுந்தரர் ஞானசம்பந்தர், அருணகிரிநாதர் முதலிய அருட்செல்வர்கள் தமிழிசையால் இறைவனைப் போற்றி மகிழ்ந்த ஸ்ரீசைல ஆலயம் இன்று நமது தமிழகச் சிற்பிகளால் மேலும் பரிணமிக்கப் போகிறது. அம்மன் கோயில் கோபுரம் கட்டி முடிக்கப்பட்டவுடன் கம்பீரமாக நின்று நமது தமிழகச் சிற்பிகளின் பெருமையை என்றென்றும் பேசும். இந்தச் சிந்தனை என்னை மெய்சிலிர்க்கச் செய்தது.

உளிகளில் சுத்தியல் மோதும் உலோக ஓசையின் எதிரொலி அந்த வட்டாரத்தை நிரப்பியது.

நாட்டரசன் கோட்டையிலே ஏலேலோ
நல்லதொரு கன்னுத்தா ஏலேலோ
வவுத்தவலி தீர்த்திட்டா ஏலேலோ
வந்திடுவேன் சந்நிதிக்கு ஏலேலோ

ஆரம் போடுபவரின் குரல் ஆரவாரிக்க, சிற்பக் கலைக்கு இசை கருவி கூட்டிக்கொண்டிருந்தது.






# ப்ரூக் பாண்ட்
# பான்
## இன்ஸ்டன்ட் காபி

எப்பொழுதும் அப்பொழுதே வறுத்த மணத்துடன் கூடியது




அதை தயார் செய்வதோ மிகச் சுலபம். நீங்கள் செய்ய வேண்டிய தெல்லாம் ஒரு தேக்கரண்டி பானுக்கு சுடு தண்ணீர் சேர்க்க வேண்டியதுதான். உங்களுக்கு வேண்டிய ஒரு கப் அசல் காபி அப்பொழுதே தயார். எவ்வளவு கப் வேண்டுமானாலும் தயாரிக்கலாம்—பான் அசல் காபி.

உங்களுக்கு அசல் காபி சாப்பிட்ட திருப்தியை அளிக்க இதோ பான் இருக்கிறது. வெந்நீரை ஊற்றியவுடன் பானிலிருந்து 'கம்' என்று எப்பொழுதும் அப்பொழுதே வறுத்த மணத்துடன் கூடிய அசல் காபி உருவாகிறது. ஞாபகமிருக்கட்டும் — பான் நூற்றுக்கு நூறு பரிசுத்தமான காபி.

பான் பொறுக்கி எடுத்த காப்பிக்கொட்டைகளிலிருந்து தயாரிக்கப்பட்டு, அதன் மணமும், குணமும், புதுமையும் குன்றாதிருக்க காற்றுப் புகாத சீல் வைக்கப்பட்ட டின்களில் உங்களுக்கு வருகிறது. மணம், குணம், திடம் நிறைந்த பான் இன்ஸ்டன்ட் காபி வாங்குங்கள். அது தனிச்சிறப்பு வாய்ந்தது: ஏனென்றால் ''எப்பொழுதும் அப்பொழுதே வறுத்த மணத்துடன் கூடியது.''

ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்டாரால் சிரத்தையுடன் தயாரிக்கப்பட்டது.

# மணக் கோலம்

பி.வி.ஆர்

## அத்தியாயம் 27

ஜப்பானியனின் குண்டுக்குப் பயந்து எத்தனையோ பேர் சென்னையை விட்டுக் கிடைத்த விலைக்கு வீட்டையும்வாசலையும் விற்றுவிட்டு ஓடினார்கள். சென்னையின் பூரண ஆயுசில் நம்பிக்கை தளராத கோதண்டராமன் அவருடைய பணம் அனுமதிக்கும் அளவுக்கு வீடுகளை வாங்கிப் போட்டார். யுத்தம் முடிந்தபின் விலை விஷம்போல் ஏற ஆரம்பித்தது. இனி மேல் அது ஏறாது என்ற நிலை வந்த போது வாங்கின வீடுகளை விற்றார் கோதண்டராமன். எத்தனை லட்சம் கிடைத்தது என்று இப்போதும் அவருக்குத்தான் நினைவிருக்கும். பணம் வர வரப் பணத்தாசைதான் அதிகமாகியது. நாணயமும் கண்ணியமும் வியாபாரத்துக்குச் சாவு மணிதான் அடிக்கும் என்ற கருத்து அவர் மனத்திலும் உதித்திருக்கவே, அவர் இன்னும் என்னென்ன செய்தால், எப்படி எப்படி மக்களையும் சர்க்காரையும் ஏமாற்றினால் சென்னையிலேயே ஒரு பெரிய லட்சாதிபதியாக வாழ முடியும் என்று யோசித்துத் திட்டம் தீட்டலானார்.

கண்ட்ரோல்களும் கட்டுப்பாடுகளும் அவருக்குக் கைகொடுத்தன. அரேபியாவிலேயிருந்து தங்கம் வாங்கினால் அமோகமான லாபம் வரும் என்று தெரிந்தது. அதன்பின் அவருடைய வியாபார வாழ்க்கையில் அவருக்குத் தெரிந்தது கள்ளக் கடத்தலும் பதுக்கலும்தான். பாரதத்தில் பல இடங்களில் அவருடைய ஆட்கள் அவருக்காகவும் தங்களுக்காகவும் உழைத்தார்கள். எங்கெங்கே போலீஸ் இலாகாவையும், சுங்க இலாகாவையும் வசப்படுத்த முடியுமோ அங்கே அவர்களை அவர் தம் கையில் போட்டுக் கொண்டார். மற்ற இடங்களில் ஏமாற்றினார் தம் சாமர்த்தியத்தினால். ஒரு தடவை பிடிபட்டால் ஏழு தடவை பிடியிலிருந்து நழுவினார். ஆனால் பிடிபடுகிற போதெல்லாம் தம் பெயர் வெளிவராமல் பார்த்துக் கொண்டார். அவருடைய செல்வம் வளருவதற்காகப் பாடுபட்டு உழைத்து, கடைசியில்



சிறைக்குச் சென்றவர்களை அவர் என்றுமே நினைவில் வைத்துக் கொண்டதில்லை.

அவருடைய புனிதமான வியாபாரத்தில் அவரை ஏமாற்றியவர்களும் உண்டு. முன்பின் பார்த்திராத வடஇந்திய வியாபாரிகள் சிலர், கோதண்டராமனைவிடக் கெட்டிக்காரர்கள் என்பதை ருசுப்படுத்தினார்கள். லட்சக் கணக்கில் லாபம் சம்பாதித்ததைப் போலவே லட்சக்கணக்கில் நடுநடுவே நஷ்டமும் உண்டாயிற்று. ஆனாலும் மனம் தளராத கோதண்டராமன் நஷ்டத்தை விட லாபம் அதிகமாக இருக்கிறதா என்ற ஒரு கணக்கையே பார்த்துக் கொண்டார். சூதாடுகிறவன் கடைசியில்தான் கணக்குப் பார்க்க வேண்டும் என்று அவருக்கும் தெரியும்.

இந்தக் கோண்டராமன் இப்போது மனைவி பாக்கியம், பிள்ளை ரவி, பெண் அகிலா இவர்களுடனும், தேவைக்கு மீறிய சிப்பந்திகளுடனும், சௌகரியங்களுடனும் வாழ்ந்து வருகிறார். அவருடைய செல்வ நிலை கண்டு, அன்று அவருக்கு உதவி செய்ய மறுத்த உறவினர்கள் எத்தனையோ பேர், உறவை நிலைநிறுத்த வந்தார்கள். அவர்களைக் கூர்க்காவே திருப்பி அனுப்பினான்.



கோதண்டராமனுக்குத் தம் திறமையில் எவ்வளவு நம்பிக்கை இருந்ததோ அவ்வளவு தம்முடைய ஆரோக்கியத்திலும் இருந்தது. பழையதைச் சாப்பிட்டும் தேகப் பயிற்சிகள் செய்தும் அவர் வாலிபத்தில் காளை போல் இருந்தவர். என்ன அலைந்தாலும் திரிந்தாலும் ஒரு வேளை பட்டினி கிடந்தாலும், உடலின் சக்தி குன்றாது என்று தமக்குத் தாமே பெருமை கொண்டவர். பணம் பெருகப் பெருக, அவருடைய ஆரோக்கியமும் பெருகியது. 'பாக்கிய நிலைய'த்தில் பாலும் நெய்யும் பெருகின. கனி வர்க்கங்

களுக்கும் சத்துள்ள உணவு வகைகளுக்கும் குறைவில்லை.

ஐம்பது வயதைத் தாண்டிய பிறகும் கிழட்டுத்தனத்தின் சாயை கூடத் தோன்றாத அவரை எந்த நோயும் அணுகியதில்லை. அணுகவும் அணுகாது என்று அவர் இறுமாந்திருந்தார்.

டைபாய்டு, நியுமோனியா, பிளட் பிரஷர், டையாபடீஸ் என்று ஆளைக் கொல்லக்கூடிய வியாதிகள் ஏதும் கோதண்டராமனை நெருங்கவும் பயப்பட்டன.

ஒரு நாள் அவருடைய ஐம்பத்தேழாவது வயதில் பிற்பகல் மூன்று மணிக்கு மாடி இறங்குகையில் இருதயம், தான் இன்னும் அவருடைய உடலில் இருப்பதைத் திடீரென்று உணர்த்திற்று.

மூச்சுவிட முடியாமல் திணறி, மார்பின் வலியில் தம்மைத் தாமே இழந்து போய், வலி வந்த இடத்தையும் கையால் பிடிக்க முடியாமல் கோதண்டராமன் தம் வாழ்க்கையில் முதன் முறையாக அலறினார். மாடிப் படியில் உருண்டு உருண்டு விழுந்து கிடந்த அவரை, அந்தரங்கக் காரியதரிசி ராஜா என்கிற ராஜாங்கமும், சிமாச்சுவும், ஆறுமுகமுமாகச் சேர்ந்து தூக்க முடியாமல் தூக்கி, ஒரு படுக்கையின் மீது கிடத்தினார்கள். கைகால் வெல வெலத்துப் போய், செய்வதறியாமல் கலங்கிப் புலம்பி பாக்கியம் நிற்க, அசாதாரண நிம்மதியுடன் அகிலா இரண்டு மூன்று டாக்டர்களுக்கு ஃபோன் மூலம் அவர் உடல் நிலையை அறிவித்தாள்.

வந்த மூன்று டாக்டர்களும் தங்களுடைய ஏகோபித்த அபிப்பிராயத்தைச் சொல்லிவிட்டு, வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்தார்கள்.

ஒரு மாத காலம் கோதண்டராமனை டாக்டர்களும் பாக்கியமும் படுக்கையில் கட்டிப் போட்டு வைத்தார்கள். அந்த ஒரு மாத காலத்தில் தான் அவருக்குப் பயம் உண்டாயிற்று. இருதயக் கோளாறு உள்ளவர்கள் அதிக நாட்கள் இருக்கமாட்டார்கள் என்பதை அவர் கண்கூடாகப் பார்த்து அறிந்திருக்கிறார். தண்ணீரில் மூழ்கியிருக்கிறவனுக்காவது மூன்று முறைகள் தப்பித்துக் கொள்ள சந்தர்ப்பம் கிடைக்கும் என்பார்கள். ஆனால் பலவீனமான இருதயக்காரர்களுக்குத் தப்பிக்கச் சந்தர்ப்பமே கிடையாது என்று அவர் நினைத்தார். அவரைப் பொறுத்தமட்டில் முதல் சங்கு ஊதியாகிவிட்டது. இரண்டாவது சங்கு காதில் ஒலிப்பதைக் கேட்டு மூன்றாவதுக்கும் காத்திருப்பாரா?.... அல்லது இன்னும் ஒரு தடவைதான் சங்கொலி கேட்குமா? அப்படியானால் அது எப்போது?

பயம் தோன்றிய அந்த ஒரு மாதத்தில்தான், தனிமையில் அவர் திண்டாடிக் கொண்டிருந்த போது, வாய் திறந்து பேசவும் கூடாது என்று டாக்டர்கள் கட்டளையிட்டு, பாக்கியமும்— அதை அமுலாக்கிய போது அவருக்குத் தம் வாழ்க்கையின் பின்னோட்டத்தைப் பார்க்க முடிந்தது. முன்னோக்கியே இதுகாறும் விரைந்தோடிய மனக் குதிரை நின்று பின்னோக்கிப் பார்த்தது, தான் விழுங்கி வந்த தூரத்தை!

பிறந்த பிறப்பு, சிரமப்பட்ட வாலிபம், அப்போது அவர் உழைத்த உழைப்பு, ஏதோ ஒரு தெய்வசந்நிதியிலே நடந்த கலியாணம், முதன் முதலாக அவர் லக்ஷ்மி படத்துக்குக் கற்பூர தீபாராதனை காட்டிவிட்டு ஆரம்பித்த வியாபாரம், இரும்புக் கம்பிகளையும், குழாய்களையும் அவரே தூக்கிப் போட்டது, யுத்தத்தைக் கண்டு பயந்து ஓடிய கோழைகள், அவர் வாங்கி விற்ற வீடுகள், அரேபியா தங்கம் இதெல்லாம் தாறுமாறாக அவருடைய மனக்கண் முன் ஓடோடி வந்தன.

வியாபார லாபத்தில் அவர் திளைத்துப் போய்க் கொண்டிருக்கையிலேயே அவர் லாபத்தை ஈட்ட எடுத்துக் கொண்ட முறைகளும் நினைவுக்கு வந்தன. சிறைக்குச் சென்ற சவுத்திரி, ஆல்வாரிஸ், விநாயக்ராம் பான்ஸ்லே கண்முன் நின்றார்கள். சாம்பமூர்த்தியின் பணம் அவருடைய கழுத்தை நெரித்தது.

எத்தனை பேர்களை அவர் எப்படியெல்லாம் வஞ்சித்திருக்கிறார்? எத்தனை ஏழைகள் அவர் உதவி செய்வார் என்ற எண்ணத்துடன் அவருடைய கட்டளைகளுக்கெல்லாம் கீழ்ப்படிந்து கடைசியில் ஏமாற்றத்தில் மனம் உடைந்து போயிருக்கிறார்கள்? ஜயந்தி முல்சவுகார், நவநீதம், ரகுபதி என்று எத்தனை பேர்?

படுக்கையில் கட்டுண்டு கிடந்த கோதண்டராமனின் மனச்சாட்சி அலறி வீறிடலாயிற்று. அவர் வியாபாரத்தில் நிறைய லாபம் சம்பாதிக்கலாம்! ஆனால் மகத்தான வியாபாரமான வாழ்க்கையில் அவர் சம்பாதித்தது என்ன? கண்ணையே மறைக்கும் நஷ்டம்தானே அவருக்கு இப்போது

எஞ்சியிருக்கிறது? ... நினைக்க நினைக்க, அவர் தாம் இருக்கப் போகிற காலம் நாட்கணக்கிலோ அல்லது மாதக் கணக்கிலோதான் என்ற எண்ணம் அதிகமாக, அதிகமாக, நஷ்டத்தை ஈடுகட்ட லாபம் சம்பாதிக்க வேண்டும் என்று தோன்றியது.

அவர் எப்படி அதைச் செய்வார்? பழக்கமில்லாத புதுத் தொழில் அல்லவா அது? தம்மைத் தாமே கடைத் தேற்றிக் கொள்ளுவது எப்படி? மனச் சாட்சியைத் திருப்திப்படுத்தினுல் அவருடைய ஆத்மா என்றென்றும் சாந்தியுடன் விளங்குமா? இவ்வளவெல்லாம் பாவம் செய்தவன் - என்ன செய்தால், என்ன புண்ணியத்தைச் செய்தால் கல்லான பாபம் கரையும்? பிராயச் சித்தம் என்ருல் என்ன?

ஒரு மாதத்துக்குப்பின் ஒரு நாள், அவர் பாக்கியத்துக்கும் தெரியாமல் தம்முடைய வக்கீலை வரவழைத்தார். ஆழ்ந்து சிந்தித்தபின் அவர் தம் மனத்தில் முடிவானதை ஓர் உயிலில் வடித்தார்.

'பாக்கிய நிலைய'த்தில் வேத கோஷம் ஆரம்பமாயிற்று. கோதண்டராமனின் நீண்ட ஆயுளுக்காக வேதியர்கள் வானளாவக் கேட்கும்படி மந்திர உச்சாடனம் செய்தார்கள். ஹோம குண்டத்தில் தாரை தாரையாக நெய் விழுந்தது.

புழக்கடையில் —

ஆறுமுகம் சிரித்தான். "ஐயா சாமியையே நெனைக்க மாட்டாரு.... கோவில் குளம் போக மாட்டாரு..... இப்போ இந்த மார்வலி வந்தாலும் வந்திச்சு, சாமிங்களுக்கெல்லாம் அதிருஷ்டம்தான். அடுத்த வெள்ளிக் கிழமை கபாலீசுவரர் கோவிலிலே அபிஷேகமும் அர்ச்சனையும் செய்யப் போருங்களாமே?"

சீமாச்சு பதில் சொல்வதற்குள், அங்கே திடீரென்று வந்தாள் அகிலா.

"சீமாச்சு.... இன்னும் சாம்பிராணி வேணுமாம்.... சீக்கிரமாப் போய் வாங்கிண்டு வா...." என்ருள்.

சீமாச்சு சென்றதும் அகிலா மெதுவாக ஹாலை நோக்கி நடந்தாள். எந்தவிதமும் இல்லாத அவளுடைய நடையையே பார்த்துக் கொண்டு எதிரே வந்து கொண்டிருந்தான் ராஜா. அகிலாவின் மாநிறமும், சின்னஞ்சிறு உதடுகளும், நீண்ட கண்களும் அவனுடைய மனத்தில் என்றோ பதிந்தாகி விட்டன. காலத்தையும், நேரத்தையும் எண்ணிப் பொறுமையுடன் அவன் காத்திருக்கிருன் என்




"அத்தை! உங்களுக்கு நல்ல கைராசி என்பீர்களே! நான் இந்தப் ப்ளக்கைச் சொருகினல் 'ஷாக்' அடிக்கிறது! நீங்கள் சொருகுங்க பார்க்கலாம்?"

பதையும் அகிலா ஓரளவுக்கு அறிவாள். தலை குனியாமல் அவள் அவனை வெறுப்புடன் பார்த்தாள்.

அவள் தன்னை என்றுமே வெறுக்கிறவள் என்பதை எப்போதோ அறிந்து விட்ட ராஜா, அவளுடைய வெறுப்பில் இன்றைக்கு ஒரு புதுமையும் இல்லை என்று நினைத்தவனுய், அவளைப் பார்த்து மேலும் முறுவலித்துக் கொண்டே அவளைத் தாண்டிச் சென்ருன்.

அகிலா போர்ட்டிகோவில் சிறிது நேரம் நின்றுவிட்டு ஹோமம் நடக்கும் இடத்தை நோக்கி நடந்தாள். அறையின் நட்ட நடுவே ஹோம குண்டத்திலிருந்து அக்கினிப் பிழம்பும் புகையுமாக மேல் நோக்கி வந்து கொண்டிருந்தது. சுற்றிலும் உட்கார்ந்து வேதியர்கள் மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஒருவர் மாவிலையால் நெய்யை எடுத்து ஒவ்வொரு மந்திரத்தின் முடிவிலும் அக்னிக்கு வார்த்துக் கொண்டிருந்தார்.

ஒரு நாற்காலியில் அவளுடைய தகப்பனர் உட்கார்ந்திருக்க, ராஜா விசிறியும் கையுமாக அவர் பின்னல் நின்று கொண்டிருந்தான். நிமிஷத்துக்கு ஒரு தரம் அவனைத் தன் அருகே அழைத்து அவன் காதில் கோதண்டராமன் என்னவோ சொல்லிக் கொண்டிருந்தார். அவர் என்ன சொல்கிருர், ராஜா எதற்

ருத் தலையசைக்கிறான் என்பதை அறிந்து கொள்ளவும் ஆர்வப்படாமல், அகிலா நாற்காலிக்கருகே உட்கார்ந்திருக்கும் அம்மாவிடம் சென்று நின்றாள்.

''அகிலா, உட்கார்ந்து கொள்...'' என்றாள் பாக்கியம்.

ஒரு நிமிஷம் உட்கார்ந்தவள், ''அம்மா, நான் வெளியே போகிறேன்'' என்று எழுந்திருக்க முற்பட்டாள்.

''இன்னிக்குன்னு எங்கே போறே?''

அம்மாவின் கேள்விக்கு, 'தினம் தினம்தான் இந்த வீட்டில் ஹோமமும் ஜெபமும் நடக்கிறது!' என்று சொல்ல வேண்டும் போல ஆத்திரம் கிளம்பியது அகிலாவுக்கு. ஆனால் சந்தர்ப்பம் சரியாக இல்லையே என்று பல்லைக் கடித்துக் கொண்டு ''பத்து மணிக்கு வரேன்னு அம்புஜத்திடம் சொல்லியிருக்கேன்... நான் போயாகணும்...'' என்றாள் அவள்.

''இப்போ முடிஞ்சுடும் அகிலா...''

''நீ அப்படித்தான் சொல்லுவே!'' என்று தாழ்ந்த குரலில் கூறிவிட்டு அகிலா எழுந்தாள். எப்படியோ போகட்டும் என்று அம்மா விட்டுவிட்டாள்.

அகிலா கிளம்பிச் சென்றதைக் கவனித்த ராஜா சிறிது நேரம் கழித்துக் கைவிசிறியுடன் வெளியே வந்து விரைவாக நடந்தான்.

அப்போதுதான் அகிலா போர்ட்டிகோவில் நின்று கொண்டிருந்த மோட்டார் காரின் கதவைத் திறக்கக் கை வைத்தாள்.

''அகிலா, வெளியே போகிறாயா?''

''ஏன், உனக்கு என்ன வேணும்?''

''அங்கே ஹோமம் நடக்கிறது...''

''தெரியும்.''

''அப்பா நடத்துகிற ஹோமம்...''

''அதுக்குத்தான் நீ அவர் முதுகுக்கு விசிறிண்டிருக்கியே...''

''ரவியும் ஊரிலே இல்லே... நீயும் இந்தச் சமயத்திலே வெளியே போனால் பார்க்கிறவர்களுக்கு நன்னா இருக்காது.

''பார்க்கிறவர்களுக்கு நன்னாயிருக்கணும்னு, முதல்லே அங்கே உனக்கு வேலை இல்லே...'' அவள் காரில் ஏறிக் கொண்டாள்.

''பன்னிரண்டு மணிக்கு இலை போட்டாகிவிடும். வந்து விடு...''

ராஜா கத்தினதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே காரை 'ஸ்டார்ட்' செய்தாள் அவள். அடுத்த நிமிஷம் தெருவை அடைந்த வண்டி அம்புஜத்தின் வீட்டை நோக்கிப் பறந்தது. அம்புஜமும் அவளுமாக 'இந்தியப் பெண்' பத்திரிகை ஆசிரியரை அன்று பார்க்கப்போகிறார்கள். அகிலா எழுதி கொடுத்திருந்த கட்டுரைத் தொகுதியைப் பற்றிய முடிவை அன்று சொல்லுவதாக வாக்களித்திருக்கிறார். பன்னிரண்டு கட்டுரைகளில் எத்தனை அவருக்குப் பிடித்திருக்கிறதோ?

தணிகாசலம் செட்டித் தெருவில் இருந்த அம்புஜம், அகிலாவுக்காகக் காத்திருந்தாள்.

அகிலாவைப் பார்த்ததும், ''எங்கே உன் அம்மாவும் அப்பாவும் கடைசி நிமிஷத்திலே நிறுத்தி விடுவார்களோ என்று பார்த்தேன்...'' என்று கூறினாள் அம்புஜம்.

''போவோமா...?''

''நான் ரெடி.''

இரண்டு பேரும் மௌண்ட் ரோடை நோக்கிச் சென்றார்கள்.

''உன் எழுத்திலே ஆழ்ந்த கருத்து இருக்குன்னு எடிட்டர் சொன்னார்...'' என்றாள் அம்புஜம்.

''உம்..... பார்க்கலாம்''

''பன்னிரண்டு கட்டுரைகளும் பிரசுரமாகிவிடும் பாரேன்!''

''பார்க்கலாம்...''

கோதண்டராமன் என்னதான் ஐசுவரியத்தில் திளைத்திருக்கட்டுமே, அவருக்குக் குடும்ப இன்பம் போதாது. இரு குழந்தைகளும் பெரியவர்களாகப் போனதிலிருந்து அவருடைய பேச்சே செல்லாத நாணயமாகி விட்டது. பார்க்கும்போதெல்லாம் ரவியிடம், 'வியாபாரத்தைக் கவனியடா' என்று கத்துவார்; கெஞ்சுவார். அவன் பதில் கூடச் சொல்லாமல் கையிலிருக்கும் புத்தகத்துடன் அவரை வெறித்துப் பார்த்துவிட்டுப் போவான். எம். ஏ. படித்துவிட்டு, வக்கீலுக்கும் படித்த அவன், வக்கீல் தொழிலிலாவது நாட்டம் செலுத்தியிருந்தால் கோதண்டராமனுக்குத் திருப்தியாகவும் சந்தோஷமாகவும் இருந்திருக்கும். மகன் வியாபாரத்தில் ஈடுபடாததை எண்ணி வருத்தப் பட்டிருக்க மாட்டார். ''லா தெரிஞ்சுக்கணும்னு பி.எல். படிச்சேனே ஒழிய, யுவர் லார்டு, மை லார்டுன்னு கவுனைக் கையிலே பிடிச்சண்டு நிக்கறதுக்குப் படிக்கவில்லே அப்பா!'' என்று தன் முடிவைத் திட்டமாக வெளியிட்டு விட்டான் அவன்.

ரவிக்கு வாழ்க்கையில் எவ்வளவு தூரத்துக்குப் பற்று இருக்கிறது என்பதை யாராலும் நிர்மாணமாகச் சொல்ல முடியவில்லை. ஒரு வருஷம் நெருங்கிப் பழகியும் அதன் பின் கடந்த ஏறொட்டு ஆண்டுகளாக அவ்வப்போது சந்திக்கும் சந்தானத்துக்குக் கூட ரவியை நன்றாகப் புரியவில்லை.

செப்டம்பர் 29 உ முதல்

சென்னை : கெயிட்டி · பாரத்

சயானி · லிபர்டி

மற்றும் தென்னாடெங்கும்

**வெங்கடேஸ்வரா மூவீஸ்** அளிக்கும்

**அருண் பிரசாத் மூவீஸ்**

# முகூர்த்த நாள்

டைரக்ஷன் : **P. மாதவன்** B.A.,


ELEGANT

உரிமையாளர்கள் :- **வெங்கடேஸ்வரா மூவீஸ்**

7, [illegible] ரோட், [illegible] சென்னை-18

# ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் நூல்கள்



சின்ன காஞ்சீபுரம் மகாவித்துவான், உபயவேதாந்த, பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார்ஸ்வாமிகள் வைணவ சம்பிரதாய நூல்களுக்கெல்லாம் தமிழிலும், அது மட்டுமின்றி வடமொழி, தெலுங்கு, ஹிந்தி ஆகிய பாஷைகளிலும் விளக்க வுரைகள் வகுத்துள்ளார். மேற்படி நான்கு மொழிகளிலும் மாதாந்தர வெளியீடுகளும் முப்பது வருடகாலமாக வெளிவருகின்றன. அவர் இயற்றியுள்ள நூல்கள் பன்னிரண்டு துறைகளில் அமைந்தவை.

1. **பூர்வாசார்யர் பெருமை நூல்கள் :** ஆழ்வார்களின் வைபவங்களும் ஸகல ஆசாரியர்களின் வைபவங்களும்.
2. **இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்:** வான்மீகி ராமாயணம் பூர்த்தியாக வசன நடை. திவ்வியப் பிரபந்தங்களில் ஆழ்வார்கள் அநுஸந்தித்த பகவத் கதைகள்.
3. **உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸ நூல்கள் :** திருப்பாவை ஜீயர், ஸத்காலக்ஷேப ஸபை விருந்து முதலான 23 நூல்கள்.
4. **வேதாந்த விளக்க நூல்கள் :** விசிஷ்டாத்வைத தரிசனம், விசிஷ்டாத்வைத ஸாரம், விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம், பகவத்கீதை அறுபத்திரண்டு, ஸ்ரீ பாஷ்யஸாரம் முதலியன.
5. **திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை :** நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கும் பூர்த்தியாக விரிவுரைகள். 20 தொகுதிகள். தெலுங்கிலும் ஸம்ஸ்கிருதத்திலும், ஹிந்தியிலும் உண்டு.
6. **ஆசார்யர்களின் ' தமிழ் நூல்களுக்கு உரை :** ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை, உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி— இவற்றுக்கு விரிவுரை, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி உரை முதலியன.
7. **ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்:** முமுக்ஷுப்படிஸாரம், ஸ்ரீவசன பூஷணஸாரம், தத்வத்ரயஸாரம், ஆசார்ய ஹ்ருதயஸாரம், ஆசார்ய ஹ்ருதயப் பதவுரை.
8. **ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களின் உரை:** முகுந்தமாலை, ஸ்தோத்ர ரத்னம், சதுச்ச்லோகி, கத்யத்ரயம், பஞ்சஸ்தவம், ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீ குணரத்ன கோசம், ஸுதர்சநசதகம், யதிராஜவிம்சதி, நக்ஷத்ரமாலிகை, தேசிக ஸ்தோத்ரங்களில் 12. இவற்றுக்கு விரிவான உரை, சிறிய ஸ்தோத்ரங்களனைத்துக்கும் உரை.
9. **வேத லக்ஷண விசார நூல்கள் :** வேதாத்யயன ஸர்வஸ்வம், பதபாட பரித்ராணம், பதபாட பரிசுத்தி, வேதபாஷ்ய விமர்சனம் முதலான பத்து நூல்கள்.
10. **ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள் :** ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி, ஸத்ஸம்ப்ரதாயார்த்தரக்ஷா, ஸர்வஜ்ஞஸூக்தி ஸர்வஸ்வம், வைசாகோத்ஸவோபந்யாஸமாலை, திருவல்லிக்கேணி உபந்யாஸமாலை முதலிய 27 நூல்கள்.
11. **லோகாபிராம நூல்கள்:** நற்போது போக்கு, ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி, ஸ்ரீ ராமாநுஜபூஷணம், கம்பரின் கவித்திரட்டு முதலான நூற்றுக்கணக்கானவை.
12. **பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள் :** ஸதாசார்ய ஸூக்திரக்ஷா, அத்புத சக்தி, வரதன் ஸந்நிதி வரலாறு, ரத்ன பரீக்ஷா, ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன், வம்பவிழ் கோதை தத்துவம், ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி, சதபூஷணீ வஜ்ரகுடாரம், சாங்கர சிரோபூஷா, விசிஷ்டாத்வைத விஜயத்வஜம், ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம், ஆழ்வார்களின் காலநிர்ணயம், ஸாத்ய பக்தி, ஸாதநபக்தி, சோதனம் முதலான 86 நூல்கள்.

இப்பன்னிரண்டு துறைகள் தவிர, பதின்மூன்றாவது துறையும் உண்டு. அதில், பூர்வாசாரியர்கள் அருளிச் செய்த காலக்ஷேப க்ரந்தங்கள் யாவும் தமிழ், தெலுங்கு, தேவநாகரி லிபிகளில் பரிஷ்கரித்து அச்சிடப்பட்டுள்ளன.

முழுப் புத்தகப் பட்டியலுக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும் :

**கிரந்தமாலா காரியாலயம், சின்ன காஞ்சீபுரம், செங்கல்பட்டு மாவட்டம்**

நூல் நிலையங்களிலேயே தன்னைப் பற்றி கொடுத்து மூழ்கியிருக்கும் ரவி ஆங்கில இலக்கியங்களையும், சரித்திர நூல்களையும் படித்துக் கொண்டிருக்கிறான் என்பதை அவன் அறிவான். மேனாட்டுச் சரித்திர ஆசிரியர்கள், பாரதத்தின் சரித்திரத்தைச் சரிவர எழுதிவைக்கவில்லை என்ற கருத்தும் அவனுக்கு உண்டு என்று சந்தானத்துக்குத் தெரியும். கடந்த அறுநூறு எழுநூறு ஆண்டுகளில் பாரதத்தில் பொருளாதார அரசியல் பிரச்னை என்னென்ன எப்படி எப்படி உருவாயிருந்தன என்பதைத் திட்டவட்டமாக அறிய ரவிக்கு மிகுந்த ஆவல் உண்டு. அதற்காக அவன் இந்தியாவில் பல பாகங்களிலும் உள்ள சரித்திர நூலாசிரியர்களைச் சந்திக்கவும் நூல் நிலையங்களைத் தேடியும் அலைகிறான். ரவி நீண்டதோர் சரித்திரம் எழுதத்தான் தன்னைத் தயாராக்கிக்கொண்டு வருகிறான் என்று நினைத்தான்சந்தானம்.

ரவிக்கு இந்திய சரித்திரத்திலும் கலாசாரத்திலும் ஈடுபாடு இருந்தது என்றால் அவனைப் போலவே எம். ஏ. படித்திருந்த் அகிலாவுக்கும் கட்டுரை எழுதுவதிலும் கதைகள் புனைவதிலும் நாட்டம் இருந்தது. கல்லூரிப் பத்திரிகைகளில் மட்டுமே கட்டுரைகள் எழுதியிருந்த அவள் படிப்பு முடிந்தபின் இரண்டு சிறு கதைகளும், நான்கு கட்டுரைகளும் எழுதி, பற்பல பத்திரிகைகளுக்கு அனுப்பினாள். 'இந்தியப் பெண்' மட்டும் ஒரு கட்டுரையை ஏற்றுக் கொண்டது. மற்ற கதைகளும் கட்டுரைகளும் திரும்பி வந்ததைப் பொருட்படுத்தாமல் பிரசுரமான கட்டுரையால் ஊக்கமும் தைரியமும் பெற்றாள் அவள். அதற்குப் பின் ஏற்கனவே பல கதைகளும் நாவல்களும் எழுதி ஓரளவுக்குப் பெயரை நிலைநாட்டிக் கொண்ட மிஸ் அம்புஜத்தின் உதவியுடன் ஓரிரண்டு ஆசிரியர்களைச் சந்தித்தாள். அகிலாவின் ஆர்வத்தைக் கண்ட 'இந்தியப் பெண்'ணின் ஆசிரியர் அவளுடைய கருத்துக்கள் புளித்துப் போனவை என்றும், அவளுடைய நடையில் புதுமை இல்லை என்றும் பட்டவர்த்தனமாகக் கூறினார். ஒளிவு மறைவு இல்லாமல் அவர் அவளுடைய கட்டுரைகளை விமரிசனம் செய்வதைக் கேட்டு அவள் தாபப்படவில்லை. அதற்கு மாறாக எப்படி எப்படி எழுதவேண்டும், தற்கால நாகரிகத்துக்கு உகந்த கருத்துக்கள் என்னென்ன என்பதைப் பற்றிச் சிந்திக்கலானாள். தடுக்கி விழும் குழந்தைதான் எழுந்தும் ஓடும் என்று அவள் உணர்ந்தாள்.



**எழுத்தாளர்: நான் வெளியே போயிட்டு வரேன். என் பேனா மைக்கூட்டை நம்ம பயல் தொடாமல் பார்த்துக்கோ!**

**மனைவி: ஏன் உங்களைவிட நன்னாக் கதை எழுத ஆரம்பிச்சு விடுவான்னு பயமோ?**

---

அதற்குப் பின்னும் எத்தனையோ கட்டுரைகள் புறப்பட்ட இடத்துக்கே திரும்பி வந்தன. அப்புறம்தான் 'படித்த பெண்ணும், படிக்காத பெண்ணும்'— என்ற தலைப்பில் அவளுடைய கட்டுரை வெளிவந்தது. எந்த ஆசிரியர் அவளுடைய பழைய கட்டுரைகளை விமர்சனம் செய்தாரோ, அவரே இந்தக் கட்டுரையைப் புகழ்ந்தார்.

இப்போது பத்துக்கு மேலேயே அவளுடைய கட்டுரைகள் பிரசுரமாகிவிட்டன. எழுத்தில் அவளுடைய ஆர்வம் அதிகமாகியது.

ஆனால் பாக்கியம் பெண்ணின் கல்யாணத்தில் ஆர்வம் காட்டினாள். கோதண்டராமன், டாக்டர் தேவலையா என்ஜினியர் சிறந்ததா அல்லது ஐ. ஏ. எஸ். பெரியதா என்று தமக்குள் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

அகிலா அம்மாவையோ, அப்பாவையோ லட்சியம் செய்யவில்லை. தற்போதைக்குத் தனக்குக் கல்யாணம் வேண்டாம் என்பதை மட்டும் அழுத்தம் திருத்தமாகச் சொல்லிவிட்டாள். தனக்கு வயது ஆகிக்கொண்டு வருவதைப் பற்றி அவள் கவலைப்படவே இல்லை.

(தொடரும்)



# தலைகுனிவு

ரா. வேங்கடசாமி

என் மகள் வசந்தி வீட்டை விட்டுப் போய் விட்டாள். வெளியில் சொல்ல முடியாத நிலை. தகப்பனுடன் இருக்கப் பிடிக்காமல் ஓடி விட்டாள் என்று சொன்னால் யாராவது நம்புவார்களா? ஆனால் உண்மை அதுதான். அதை மறைக்க நான் சொல்ல வேண்டியிருந்தது ஒரே ஒரு பொய்...

''சொந்தக்காரர் வீட்டுக்குப் போயிருக்கிறாள்..... வந்து விடுவாள்!''

பொய் என்று சொன்னேன்? ஆம், பொய்தான் ! எந்தச் சொந்தக்காரர்களை நான் சேர்த்துக் கொண்டிருந்தேன், அவர்கள் என் மகளைச் சேர்த்துக் கொள்வதற்கு?

தந்தை பார்த்த மாப்பிள்ளை பிடிக்காமல் போய் விட்டாள். சித்தியின் கொடுமை தாங்காமல் ஓடி விட்டாள்.... பரீட்சையில், 'பெயில்' ஆகிவிட்டாள் என்பதனால் ஓடிவிட்டாள் என்றெல்லாம் காரணங்கள் இருக்க அவைகளில் ஒன்றைக்கூட என் மகள் பயன்படுத்திக் கொள்ள இடம் இருக்கவில்லை.

காரணம், நான் அவளுக்கு மாப்பிள்ளை பார்க்கவில்லை. அவளுக்குச் சித்தியும் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாக அவள் படித்து முடித்துவிட்டு வீட்டில் இருந்தாள்! என்னைப் பிடிக்காமல்..... என் நடவடிக்கைகள் பிடிக்காமல் அவள் போய் விட்டாள்! அதை நானும் என் மனமும்தான் அறிவோம் !

நல்லவனை நல்லவன் என்று சொல்ல யாரும் தயங்குவதே இல்லை. ஆனால் கெட்டவனை நல்லவன் என்று சமூகம் சொல்ல முன் வருகிறது என்றால், அதற்குப் பணமும், அதிகார பலமும் அவசியமாக இருக்க வேண்டும் ! என்னிடம் இவை இரண்டுமே இருந்தன. ஊரில் பெரிய மனிதன் நான். எதற்கும் என்னிடம் வருகிறவர்கள் இங்கே நிறைய இருந்தார்கள். அவர்கள் கேட்ட போதெல்லாம் பணத்தைத் தாராளமாக அள்ளிக் கொடுக்க எனக்கு மனம் இருந்தது. அதில் கொஞ்சம் சுயநலம்.... பணத்தால், நான் செய்யும் அக்கிரமங்களைத் திரைபோட்டு மறைத்துவிட முடியும் என்று நான் உறுதியாக நம்புவதன் விளைவு அது !

மறைக்க முடிந்ததா? முடிந்தது என்று நான் என்னால் சொல்ல முடியும்.... நானே முடிவு கட்டிவிட்ட ஒரு விஷயத்துக்கு, மற்றவர்களைப் போல் அபிப்பிராயம் கேட்க வேண்டிய அவசியம் இல்லை.

பணம் பத்தும் செய்தது... என்னைப் பொறுத்தவரை ! ஊராரின் கண்களை என் பணத்தினாலும், அந்தஸ்தினாலும் கட்டிவிட்டதாக நான் பெருமைப் பட்டுக் கொள்ளலாம்.

ஆனால் வீட்டில், என் வீட்டில், எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு ஒருத்தி இருந்தாளே..... அவள் கண்களை நான் எப்படிக் கட்ட முடியும்? அவள் என் மகள் வசந்தி.

அதனால்தான் அவள் ஓடிவிட்டாள்!

என் மனைவி ரங்கநாயகி உயிருடன் இருந்தவரை, நான் சாதாரணமானவர்களில் ஒருவனாகத்தான் இருந்தேன். அப்போது என் மகளுக்கும் விவரம் தெரியாது. மனைவியால் அதிர்ஷ்டம் வந்தது, மகளால் அதிர்ஷ்டம் வந்தது என்பதெல்லாம் என் விஷயத்தில் பொய்யாகி விட்டன. என் மனைவி என்று இறந்தாளோ அன்றுதான், அதிர்ஷ்ட தேவதையும் என் பக்கம் திரும்பினாள்.

ஓட்டு வீட்டில் குடியிருந்தவனுக்குக் காரும் பங்களாவும் ஒரு தொழிற்சாலையும் சொந்தமாக வேண்டுமென்றால், என் வளர்ச்சியைப் பற்றி நானே அதிகம் சொல்ல வேண்டியதில்லை என்று நினைக்கிறேன் !

நோட்டடிக்கிறான், புதையல் எடுத்திருப்பான், திருடி இருப்பான் என்று பல விமரிசனங்கள் என்னைப் பற்றி இரகசியமாக உலவியது எனக்கே தெரியும்! இதில் ஏதாவது ஒன்று உண்மை என்று வைத்துக் கொண்டால்கூட, அதை நானாக வெளியில் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா ?

அதே சமயத்தில் என்னைப் பற்றி 'அந்த' நாலு பேர் நல்லவிதமாகப் பேச வேண்டுமென்றால் நான் என்ன செய்ய வேண்டும் என்கிற கவலையையும், நான் நன்றாக அறிந்திருந்தேன்.

பணம் தண்ணீராகச் செலவாயிற்று. செலவு செய்வதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. பெயர் சம்பாதிப்பது என்றால் அது இலேசான காரியமா? நான் விரும்பியவாறே 'நல்ல மனிதர்' என்று 'அதே நாலு பேர்.' சொல்லும் அளவுக்கு நிலையை உண்டாக்கி விட்டேன்.....

என் எதிரிகளை வீழ்த்தி, நல்ல பெயர் சம்பாதிக்க என் பணம் எனக்கு உதவியது! ஆனால் அதே பணத்தால், குணத்தில் தன்

தாயைப் போன்றிருந்த என் மகளால் என்னை நல்லவன் என்று என்னால் சொல்ல வைக்க முடியவில்லையே!

அதனால்தான் அவள் இந்த வீடே வேண்டாம் என்று ஓடி விட்டாள்!

கையில் காசில்லாத போது என்னிடம் நேர்மையும் நன்னடத்தையும் இருந்தன. பணம் வந்துவிட்டபோது, அவை இரண்டுமே என்னிடம் இல்லை. மனைவியைத் தவிர வேறு எந்தப் பெண்ணின் முகத்தையும் நான் பார்த்தே அறியாதவன் ஒரு காலத்தில் !

ஆனால் இப்போது ? மதுவுக்கும் மங்கைக்கும் நான் அடிமையாகி விட்டிருந்தேன்.

பொய்யை மெய்யாக்கும் சக்தி என் பணத்துக்கு இருந்தது. அந்தச் சக்தியினால், என் மகளை வீட்டினுள் நிறுத்த முடியவில்லை. இவ்வளவு வசதி இருக்கிறது. மகளுக்குத் திருமணம் செய்து வைக்க என்ன தடை? தடை இருக்கவில்லைதான்! என் மகளுக்கென்ன, அவள் நல்ல அழகி. படிப்பு இருந்தது; பணம் இருந்தது. மாப்பிள்ளைகள் ஓடிவருவார்கள் என்று நான் நினைத்தேன். வந்தார்கள். என் பணத்துக்காக ஆசைப்பட்டு வந்தார்கள். பணம் என் மகளுக்குத்தான் என்றாலும், அவளை மணக்க வருபவனுக்குத் தகுதி இருக்க வேண்டாமா?

தகுதியை நான் பார்த்தேன் ! ஆம், நான் தான் பார்த்தேன். என்னிடமிருந்த பணம் பார்த்தது. நான் தகுதியைப் பார்த்த போது என்னிடம் சம்பந்தம் வைத்துக் கொள்ள வந்தவர்கள் மட்டும் பார்க்காமல் இருப்பார்களா ? அவர்கள் பார்த்த போது, என் தகுதி, அவர்கள் கண்களுக்கும் மனத்துக்கும் திருப்தி அளிக்கக்கூடியதாக இல்லை!

பொதுக் காரியங்களுக்கு முன் நிற்கும் போதும், பண உதவி தேவையானபோதும், என்னை நல்லவன் என்று பாராட்டிய சமூகம் என் மகளின் திருமணத்துக்குச் சம்பந்தம் பேச வந்தவர்களிடம் மட்டும் உண்மையைப் பேசி விட்டது.

குறுக்கு வழியில் பணம் சம்பாதிக்கும் குபேரன், பெண்களைக் கண்டால் பல்லை இளிப்பவன், சட்டவிரோதமான காரியங்களில் ஈடுபட்டிருப்பவன், என்றாவது ஒரு நாள் ஜெயிலுக்குப் போக வேண்டியவன் என்றெல்லாம் சொன்னால், பணம் இருந்தாலும் தகுதியை மட்டுமே பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? ஒன்றல்ல, இரண்டல்ல. பல சம்பந்தங்கள் கைநழுவின. அதன் காரணத்தை நான் மட்டும் அறிவேன் என்று நான் நினைத்திருந்தேன். ஆனால் என் மகளும் அறிவாள். இல்லாவிட்டால் அவள் ஏன் வீட்டை விட்டு ஓடவேண்டும்? நான் வெளியில் போகும்போது கை நீட்டிப் பேசாத சமூகம், அவள் வெளியில் போகும்போது மட்டும் அப்பனின் நடத்தையைப் பற்றி ஜாடை மாடையாகப் பேசினால், பாவம் அவள் என்ன செய்வாள்?

பணத்தால், சிலரைச் சில நாட்களுக்குத்தான் காப்பாற்ற முடியும் என்கிற உண்மையை நான் உணரவேயில்லை. பணம் இருக்கும்வரை தைரியமாக எதையும் செய்யலாம் என்று நான் நினைத்தது தவறுதான். பணத்தால் 'நல்லவனை' உருவாக்கி வைத்திருந்த சமூகம், சமயம் வரும்போது நல்லவனின் முகத்திரையைக் கிழிக்கவும் தயங்குவதே இல்லை. என் மகள் விஷயத்தில் சமூகம் அப்படித்தானே நடந்து கொண்டது?

பெற்றவர்களின் பாவம் பிள்ளைகளின் தலைமேல் என்பது வாஸ்தவமான பேச்சு!

வசந்திக்கு வயது இருபத்தி ஆறு. எப்போதோ திருமணம் நடந்து கணவன் வீட்டுக்குப் போய் இருக்க வேண்டியவள், தகப்பனின் வீட்டிலேயே இருந்தாள். அதற்கு யார் காரணம்?... நான்தான்...நானேதான். நடப்பது நடந்தே தீரும் என்கிற போதனையை மனத்தில் கொண்டு எப்போதும் போல் கவலைப்படாமல் இருந்தேன்.

நான் இருக்கலாம். ஆனால் என் மகள் இருப்பாளா? அவள் ஓடிவிட்டாள்!

தானுண்டு, தன் வேலையுண்டு என்றே இருந்து பழக்கப்பட்டு விட்ட என் மகள் கொஞ்சம் பெருந்தன்மையாக எனக்கு முதலில் புத்தி சொன்னவள், அடுத்த தடவை கடுமையான விமர்சனத்தில் இறங்கினாள். அதற்கடுத்த தடவை மிகவும் கேவலமாகத் திட்டினாள். என் மனத்தில் அதுவும் உரைக்கவில்லை. காரணம் அவள் என் மகள்.

வசந்தியின் பொறுமைக்கும் ஓர் எல்லை இருந்தது. அன்று அவள் என்னைக் கடிந்து கொண்டபோது, மறுநாள் அவள் வீட்டை விட்டுப் போய்விடுவாள் என்று நான் நினைக்கவே யில்லை. நினைத்திருந்தால், பொய்யான வாக்குறுதியைக் கொடுத்தாவது, அவளை நான் நிறுத்தி இருப்பேனே! என் மகள், அந்த இரவு சொன்ன வாசகங்கள் இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டுதான் இருக்கின்றன.

''அப்பா...இப்போது அழுதுகொண்டு ஓடினாளே, அந்தப் பெண் என்ன நினைத்துக்





"மயிலாப்பூர் லஸ்ஸுக்குப் பஸ்ஸில் போக 22 காசு டிக்கட் வாங்கியிருந்தேன். சீரமைப்புக் கட்டணப்படி 2 காசு 'லெஸ்' ஆகிவிட்டது."

"நான் முன்பு லஸ்ஸுக்கு 18 காசு டிக்கட் வாங்கினேன். இப்ப 2 காசு 'ப்ளஸ்' ஆய்ட்டது!"

கொண்டு போயிருப்பாள், தெரியுமா?..... 'பெரிய மனிதர் எதற்கோ கூப்பிடுகிறார் என்றுதான் வந்தேன்... ஆனால் அவர் இவ்வளவு கீழ்த்தரமான மனிதராக இருப்பார் என்றே நான் நினைக்கவில்லை. ஒருவேளை பெரிய மனிதர்கள் எல்லாம் இப்படித்தான் இருப்பார்களோ?' என்றுதானப்பா அவள் நினைத்திருப்பாள்! அவள் உங்களைத் திட்டிவிட்டுப் போன பிறகாவது உங்களுக்குப் புத்தி வருமா? வராது என்று எனக்குத் தெரியுமப்பா! உங்களை என்னாலேயே திருத்த முடியாதபோது, வேறு யாரால் திருத்த முடியும்? உங்களுக்கு எல்லாம் இருக்கிறது. ஒரு பெண்ணைப் பார்த்து மணந்து கொண்டு நீங்கள் நிம்மதியாக இருக்கலாமே! அத்துடன் உங்கள் தொழிலுக்கும் ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிடலாம்! எனக்குத் திருமணமாகவில்லை என்ற காரணத்தைக் காட்டி நீங்கள் தப்பிக்க முயல வேண்டாம். எனக்கு இப்போது திருமணம் நடக்காது. அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம் ... நீங்கள் ஒழுக்கமுள்ளவராக மாறினால், அதுவே போதும்."

கையும் களவுமாக அகப்பட்டுவிட்ட திருடனைப் போல், நான் என் மகள் முன் தலை குனிந்து நின்றேன். பதில் பேச எனக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை.

மகள் வீட்டை விட்டு ஓடிவிட்ட பிறகுதான் எனக்கு என் நிலை கொஞ்சம் புரிய ஆரம்பித்திருந்தது. அவள் எழுதிவைத்த கடிதத்தில், "நான் அவசியம் திரும்பிவிடுவேன். ஆனால் நீங்கள் முன்பு பார்த்த வசந்தியாக அல்ல..." என்றுதான் வாசகம் இருந்தது. அவள் சாகவில்லை என்கிற நிம்மதி. ஆனால் இந்த வாசகத்துக்கு என்ன அர்த்தம்?

என் அந்தஸ்துக்கு இது வெளியில் தெரிந்தால், எவ்வளவு அவமானம்? பணக்காரனாக நான் செய்யும் அக்கிரமங்களை ஒரு நாளாவது நினைத்துப் பார்த்து வெட்கப்படாத நான், என் மகள் வீட்டை விட்டுப் போய் விட்டாள் என்கிற ஒரே காரணத்துக்காக வெட்கப்படுகிறேனே, இது ஏன்?

வீட்டில் இருந்தவரை அவளைப் பற்றியே நினைத்துப் பார்க்காத நான் அவள் வெளியே போன பிறகுதான் அவளைப் பற்றி அதிகமாக நினைத்துப் பார்த்தேன். அவள் இல்லாமையினால் ஏற்பட்டுவிட்ட சூனியம் என்னைச் சித்திரவதை செய்தது.

எனக்கு அவள் ஒரே மகள். அவளை நன்றாக வைத்துக் கொள்ள முடியவில்லையே, அவள் விருப்பிக்கு நான் நடந்து கொள்ளவில்லையே என்று நினைக்கும்போதுதான் நான் சம்பாதித்த அவ்வளவு பணமும் எனக்குப் பணமாகத் தெரியவில்லை.

அடித்துப் போட்டுவிட்டதுபோல் கருண்டு விட்ட நான், நம்பகமாக இருந்த இரண்டொரு வேலைக்காரர்களை மட்டும் வெளியே அனுப்பி வசந்தியைத் தேடச் சொன்னேன்.

மூன்றாவது நாள் மாலையில்தான் எனக்கு என் மகளைப் பற்றிய தகவல் கிடைத்தது. அவள் சுவர்ணம் என்ற 'அந்த'ப் பெண்ணின் வீட்டில் இருப்பதாக!

அந்தச் செய்தியை நான் கேட்டபோது அடைந்த வேதனை இருக்கிறதே.... அதை வார்த்தைகளால் வர்ணிக்கவே முடியாது....

அங்கே போய் என் மகள் தங்குவதா? அவமானத்தால் நான் அப்போதே தூக்குப் போட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் செய்யவில்லை. அதைவிட அவமானகரமான காரியம் அன்று இரவே நடந்து விட்டது. வெளிச்சத்தில் சுவர்ணத்தின் வீட்டுக்குப் போக வெட்கப்பட்ட நான், இரவில் சென்று மகளை அழைத்துக் கொண்டு வந்துவிடலாம் என்று நினைத்திருந்தேன். அதற்குள் போலீசார் ஸ்வர்ணத்தின் வீட்டிலிருந்த அவ்வளவு பெண்களையும் கொண்டு போய் விட்டனர்!

அது அவர்கள் கடமை...

அப்போதும் அவமானத்தால் என் உயிர் போகவில்லை. ஊருக்குள் செய்தி இவ்வளவு நேரம் காட்டுத் தீயைப் போல் வேகமாகப் பரவியிருக்கும். பெயருக்கு நல்லவனாக இருந்த ஒருவனைக் குப்பையில் தூக்கி எறிந்திருப்பார்கள், இதுவரை என்னை மதித்தவர்கள்! ஆம், வெள்ளம் தலைக்குமேல் போய்விட்டது.

மகளுக்கு ஜாமீன் கொடுத்து அழைத்து வர நான் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன போது, எனக்கு முன்னால் எனது குமாஸ்தா சிவராமன் அந்தக் காரியத்தைச் செய்து அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துப் போய் விட்டான் என்கிற செய்தி எனக்குக் கிடைத்தது! வேறு வழியே இல்லாமல் சிவராமனின் வீட்டுக்குப் போனேன்.

உள்ளே இருந்து வந்த குரல் என்னை வாசலிலேயே நிறுத்தியது. என் மகள் தான் பேசினாள்.

"நீங்கள் நினைப்பது தவறு மிஸ்டர் சிவராமன்... நான் எனக்குத் திருமணமாகவில்லை என்கிற காரணத்துக்காக இப்படிப்

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது

# ஸன்லைட்




ஸன்லைட் சோப்பினுல் சலவைசெய்து பார்த்தீர்களாஞல் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை: சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி! சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது ஸன்லைட்**

லின்டாஸ்- S. 63-140 TM (R)

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.



# கார் ஓட்டும் கரங்கள் யாருடையவை?

ஆம். அவருக்கு ஒரு கார் மிகமிகத் தேவை. காரணம் தன் கருமமே கண்ணாகவிருக்கும் உத்தியோகஸ்தர் அவர். நோயையும் மரணத்தையும் எதிர்த்துப் போராடும் டாக்டர் அல்லது ஒரு முக்கியமான திட்டத்திலே அலுவல் பார்க்கும் என்ஜினியர், அல்லது ஒரு பெரிய வியாபாரத்திலே தீர்வுகாண விரைந்திடும் வர்த்தகர் அல்லது ஒருவரின் சட்டரீதியான உரிமைகளைப் பாதுகாக்கச் செல்லும் வக்கீல் அல்லது ஒரு புதிய கட்டட டிஸைனில் பணியாற்றும் கட்டடக் கலைஞன் அல்லது நாட்டின் நன்மைக்கான நிகழ்ச்சிகளை அறிவிக்கும் பத்திரிகை நிருபர் ஆகிய இவர்கள் எல்லோருக்குமே விலை மதிப்பிடமுடியாத காலம் என்னும் அரும்பொருளை மிச்சப்படுத்துவது முற்றிலும் அவசியமாகும்.

இவர்களுடைய பணிகள் ஆயிரக்கணக்கான மக்களுக்குப் பலனளிக்கின்றன. இவர்கள் தொடர்ந்து விரைந்து இயங்கிக்கொண்டேயிருக்க வேண்டும்—சொந்தமாக வாகனமில்லாவிட்டால் இவர்களுடைய வேகமும் திறமையும் அதிகமாகப் பாதிக்கப்படும். இவர்கள் அனைவருக்குமே ஒரு கார் மிக அவசியம்—உறுதி, நல்ல அமைப்பு, ஒரே நிலையான உல்லாசப் பிரயாண வேகத்தில் ஓடும் திறமை, சக்தி சிறப்பப்பட்ட OHV என்ஜின் ரோடுகளுடன் அணைந்து செல்லும் தன்மை, பெட்ரோல் சிக்கனம், எல்லாவற்றிற்கு மேலாக தாராளமான இடவசதி ஆகியவை அத்தனையும் கொண்ட கார்தான் இவர்களுக்கு மிகத் தேவை. ஆதலால், சிறிதும் தயங்காமல் இவர்கள் அம்பாஸடர் மார்க் IIடினைத் தேர்ந்தெடுப்பதில் ஆச்சரியமில்லை.

---

ஒதுக்கிடச் சிறிது நேரமுமில்லாத உங்களுக்கும் ஒரு கார் தேவை. ஏன் காத்திருக்க வேண்டும்? இன்றே உங்கள் வட்டாரத்து வியாபாரியிடம் ஒரு அம்பாஸடர் மார்க் II விற்கு பதிவுசெய்து கொள்ளுங்கள்.

---




ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட், கல்கத்தா

ASP/HM-1267

Sales & Service Throughout the Country

பட்ட இழிவான செயலில் இறங்கவில்லை. என் தந்தை அவமானம் அடைய வேண்டும், அதனால் அவர் திருந்த வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன்தான் நான் கவர்னரின் வீட்டில் தஞ்சமடைந்தேன். மனித குணம் இருக்கிறதே, அது மிகவும் விசித்திரமானது. மற்றவர்கள் மானம் அவமானம் என்றால் கேலி செய்யும் அதே நபர்கள், தங்கள் வீட்டில் மகளோ, இல்லை, மனைவியோ தலை குனிவான ஒரு செயலில் ஈடுபடுகிறாள் என்றால்தான் தலை குனிவார்கள். அப்போதுதான் மானத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்வார்கள்...''

''இந்தக் காரியத்தினால் உங்களுக்கு எதிர்காலமே இல்லாமல் போய்விட்டதை நீங்கள் உணர்ந்தீர்களா மிஸ் வசந்தி!''

''அதைப் பற்றி நான் கவலையே படவில்லை மிஸ்டர் சிவராமன்... ஒருவர் தியாகத்தினால் தான் இன்னொருவர் திருந்தி வாழ முடியும். இது உலக நியதி. என் தந்தை திருந்த இதைத் தவிர வேறு வழியே இல்லை!''

அதற்கு மேல் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்க நான் அங்கே நிற்கவில்லை. புதிய மனிதனாக என் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தேன்.



# பஞ்சாமிர்தம்

கொக்கி





☐ கோழிக்கோடு பக்கங்களில் 50 கோடி டன் இரும்புத் தாதுப் பொருள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது, உருக்குத் தயாரிப்பு விஷயத்தில் உலகிலேயே பெரிய செய்தியாகும்.

— மத்திய தொழில் மந்திரி தாமஸ்

மத்திய சர்க்கார் மனத்தை இது உருக்கும் செய்திதானா என்பதல்லவா முக்கியம்?



☐ இலங்கையிலிருந்து புறப்படு முன் பிரதமர் இந்திராவுக்கு இலங்கைப் பிரதமர் ஒரு அழகிய வெள்ளித் தட்டும், கிண்ணமும் பரிசளித்தார் — செய்தி

இந்தியாவில் எல்லாவற்றிலும் தட்டுப்பாடு ஏற்பட்டுக் கப்பரை ஏந்தும் நிலை வந்ததைக் குறிக்கவே தட்டும் கிண்ணமும் தந்திருப்பாரோ?

☐ பம்பாயில் ஆண் வேடத்திலிருந்த ஓர் அழகிய பெண் உள்பட ஆறுபேர் கொண்ட கொள்ளைக் கோஷ்டி கண்டுபிடிக்கப்பட்டது. — செய்தி

பெண் உடையிலிருந்தபோது அவள் எவ்வளவு பேர் உள்ளங்களைக் கொள்ளையடித்தாளோ?

☐ சீக்கிரமே காரைக்காலில் சிறிய கார் உற்பத்தியைத் துவக்க வேண்டுமென்று, புதுவை அசெம்பிளியில் ஒரு தீர்மானம் நிறைவேறியது. —செய்தி

செயல்படும்போது காரைக்காலில், கால் இடறிய இடமெல்லாம் காரைக் காணலாம் என்று கூறலாமா?



☐ ''நிறையக் குழந்தைகள் பெறுவதற்கு ரஷ்யாவில் ஊக்கம் தரப்படுகிறது''

— மத்திய மந்திரி ஹாத்தி

''அப்படியும் யாராவது குழந்தை இல்லாமல் இருந்தால், ராமேசுவரத்துக்கு வந்து ஸ்நானம் செய்வதாக வேண்டிக்கொள்ளட்டும்!'' என்கிறாள் இங்கு ஒரு பாட்டியம்மாள்!



☐ ''ஆறு வருடங்களுக்கு முன் அனுப்பிய தபால் கார்டு இப்போதுதான் இங்கு ஒருவருக்குக் கிடைத்தது. — கோழிக்கோடு செய்தி

இனியாவது 'உடனே பதிலை எதிர்பார்க்கும்...' என்று எழுதுவதை நிறுத்தினால் நலமாயிருக்கும்.

**பல்சுவைப் பக்கம் !**

## குப்பைக்கூடையில் பன்னிரண்டு டன்!

உலகில் உள்ள அரசாங்க அலுவலகக் கட்டடங்களில் மிகப் பெரியது. வாஷிங்டனில் போடோமாக் நதிக் கரையில் உள்ள பெண்டகன் என்னும் அமெரிக்கக் குடியரசின் பாதுகாப்பு இலாகாக் காரியாலயமே!

ஐந்து மாடிகளை உடைய பெண்டகன் 34 ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்துள்ளது.

1943ல் திறந்து வைக்கப்பட்ட இக் கட்டடத்தைப் பதினறு மாதங்களில் பதின்மூன்றுயிரம் தொழிலாளிகள் கட்டி முடித்தனர். சுமார் அறுபது கோடி ரூபாய் செலவாயிற்று.

இக்கட்டடத்தில் உள்ள தாழ்வாரங்களின் நீளம் மட்டும் 18 மைல். இக்கட்டடத்தில் உள்ள ஜன்னல்கள் 7680. இதனுள் நாற்பதினுயிரம் தொலை பேசிகள் உள்ளன. நாளொன்றுக்கு இரண்டரை லட்சம் 'கால்'கள்! இவற்றுக்கான கம்பிகள், கேபிள்கள் முதலியவற்றின் நீளம் மட்டும் ஒன்றரை லட்சம் மைல்கள்!

'பெண்டகனி'ல் வசிக்கும் முப்பதினுயிரம் அதிர்ஷ்டசாலிகளுக்காக ஏழு உணவு விடுதிகளும் எழுநூறு பரிசாரகர்களும் உள்ளனர்.

இக்கட்டடத்தினுள்ளே பல சரக்குக் கடைகள், ரொட்டி தயாரிக்கும் தொழிற்சாலை, நகைக் கடை, பூக்கடை, மருந்துக் கடை, சிகை அலங்கார நிலையங்கள், புத்தகக்கடை, தபால் நிலையம் யாவும் உள்ளன. அது மட்டுமின்றி பாங்கும், பதினேரு மருத்துவர்கள், எட்டு பல் வைத்தியர்கள், மூன்று நர்சுகள் கொண்ட ஒரு ராணுவ மருத்துவ மனையும் உள்ளன.

முழுக்க முழுக்க 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்டது இது.

இங்கு சராசரியில் ஒரு நாளைக்கு 600 மின்சார பல்புகள் பழுதடைந்து விடுகின்றன. ஒவ்வொரு நாளும் இவ்வலுவலகத்தில் பன்னிரண்டு டன்கள் அளவுள்ள காகிதம் குப்பைக் கூடையில் செல்கிறது. அவை களை விற்பதால்மட்டுமே ஆண்டு தோறும் சுமார் எட்டு லட்ச ரூபாய் வருமானம் கிடைக்கிறது.

— அ. இராமதுரை



## மண்டைக் கனம்!

அராபியர்களுக்கு மண்டை ஓடு கனமாக இருக்கும். அதில் அவர்களுக்கு மிகவும் தற்பெருமை.

ஓர் அரேபியன் தன் பாரசிக நண்பனிடம் சொன்னன்.

''என் மண்டை எத்தனை உறுதியானது தெரியுமா? ஒரு பெரிய ஆணியைத் தலையாலே அடித்துச் சுவரிலே செலுத்தி விடுவேன்!''

பாரசீக நண்பன் பத்து அங்குல நீளத்துக்கு ஓர் ஆணி கொண்டு வந்தான். அராபியன் சிறிதும் தயங்காமல் ஆணியை வாங்கிச் சுவரில் வைத்துத் தலையாலேயே அடித்து இறக்கினன். ஆணி அநேகமாய் இறங்கி விட்டது. ஆனல் கடைசி ஓர் அங்குலம் மட்டும் இறங்கவில்லை. அராபியன் எவ்வளவோ முயன்றுபார்த்தான். முடியவில்லை.

ஆச்சரியத்துடன் அவன் சுவருக்கு மறுபுறம் பார்த்தான்.

அங்கே — ஆணியின் முனை வெளியே வரும் இடத்தில் தலையைச் சாய்த்துக்கொண்டு நின்றுன் இன்னேர் அராபியன். —கனல்மணி



கிழக்கு மேற்கு ஐரோப்பாவை இணைக்கும் பெருஞ் சாலைமீது இந்த 315 அடி நீளமுள்ள ஹோட்டல் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. இதில் சுமார் 350 பேர்கள் சிற்றுண்டி அருந்தலாம்.




## காதும் கண்ணும்!



கம்மல் அணிவதற்காகக் காதுகளைக் குத்திக் கொண்டால் கண்களுக்குப் பார்வை திட்சண்யமாகத் தெரியும் என்கிற உண்மை உங்களுக்குத் தெரியுமா?

இது உண்மையோ, பொய்யோ, இப்படியொரு நம்பிக்கை இங்கிலாந்தில் பரவி வருகிறது. அங்கே இப்போது ஆயிரக் கணக்கான பெண்கள் காது குத்திக் கொள்கிறார்களாம்.

ஆதாரம்: ''டெய்லி மிர்ரர்'' — தகவல்: ''ரமன்''



தாய்ப் பாலை மட்டும் குடித்து வளர்ந்த குரங்குக்கு மலேரியா வியாதியே ஏற்படவில்லை. மலேரியா க் கிருமியும் அந்தக் குரங்கை எதுவும் செய்ய முடியவில்லை. பால் இல்லாத காரணத்தாலேயே பல உஷ்ணப் பிரதேச நோய்கள் ஏற்படுகின்றன.

— பேராசிரியர் மேக் கெய்த்

## எண்ணம் அங்கே: செயல் இங்கே!

போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் பதவிப் பிரமாணத்துக்கு ஜனாதிபதி ஜான்ஸன் வந்திருந்தார். பதவிப் பிரமாணம் ஆனதும் போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் ஒரே இரவில் அமெரிக்கா முழுவதும் தபால்கள் சேரும்படியாகச் செய்வேன் என்று உறுதி கூறினார். அதற்குப் பிறகு பேசிய ஜான்ஸன், ''நானும் அதையே விரும்புகிறேன். ஆனால் இந்த உறுதி செயல்படும் வரை பத்திரிகைக்காரர்கள் இதுபோஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் உறுதிதான் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் இது காரியமாகி விட்டால் அது ஜான்ஸன் அரசாங்கத்தின் திறமை என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும்'' என்றார்.

தகவல்: நா. சுப்பிரமணியன்



பல்சுவைப் பக்கம் 2

# காணாமற்போன கூவம்!

"கதிர்"

சென்னை நகரில் இங்குமங்கும் வளைந்து ஓடும் கூவம் நதி, எங்கிருந்து வருகிறது என்பதைப் பார்க்க வேண்டும் என்ற என் நீண்ட காலமான ஆவல் ஒன்று நிறைவேறாமல் இருந்து வந்தது.

சென்ற வாரம் ஒரு நாள், அமைந்தகரைப் பாலத்தின் மீது வந்து கொண்டிருந்த போது குனிந்து பார்த்தேன். பாலத்துக்கு அடியில் கூவம் ஒளிந்து ஓடிக்கொண்டிருந்தது.

''அட! போக்கிரி நதியே! இங்கிருந்துதானா நீ சென்னை நகருக்குள் புகுந்து எல்லாருடைய மூக்கையும் துளைக்கிறாய்?'' என்று கேட்டுவிட்டு, அது போகும் வழியைக் கண்டு பிடிக்க அதன் கரை மீதே சிறிது தூரம் நடந்திருப்பேன். அதற்குள், மேலே செல்ல முடியாமல் தெரு ஒன்று குறுக்கிட்டுவிட்டது.

அது எங்கே மறைந்துவிட்டது? எப்படிக் காணாமல் போய் விட்டது?

பலரையும் விசாரித்துப் பார்த்தேன்.

ஒருவர் சொன்னார்:

''சேத்துப்பட்டு — நுங்கம்பாக்கம் இரு ரயில்வே ஸ்டேஷன்களுக்கும் இடையில் மின்சார வண்டியில் போகும் போது கட முடா கடகடா என்று இடிமுழக்கம் கேட்கும் சத்தம் எழுந்தது. அதுதான் ரயில் பாலம். அதன் அடியில் கூவம் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தேன்.''

எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அமைந்தகரை எங்கே? நுங்கம்பாக்கம் எங்கே? இங்கே எப்படி வந்தது இந்தக் கூவம்? மறுபடியும் அதைக் கண்டு பிடித்து அதன் போக்கிலேயே கரை மீது சிறிது தூரம் நடந்து வந்தேன். எழும்பூர் டி. பி. மருத்துவமனை அருகே வந்ததும் அது மறைந்துவிட்டது!

கட்டடங்களும் தெருக்களும் குறுக்கிடவே கரை ஓரமாக நடந்து செல்லும் முயற்சியை விட்டு ஒரு டாக்ஸியை அமர்த்திக் கொண்டு கிளம்பினேன். எப்படியும் அதன் போக்கை இன்று கண்டு பிடித்தே தீர்வது என்ற உறுதியில் டாக்ஸியை விடச் சொன்னேன். வழியில் அங்கங்கே இறங்கிச் சிலரைச் சந்தித்து. ''இங்கே கூவம் நதி எங்கேயாவது போவதைப் பார்த்தீர்களா?'' என்று விசாரித்த போது, ஒருவர், 'கமாண்டர் இன் சீப் ரோடு' அருகே அதைப் பார்த்ததாகச் சொன்னார்.

கூவத்தை அங்கு சந்தித்தபின் அடுத்தபடி அதன் போக்கு என்ன என்பது சந்தித்த யாருக்கும் தெரியவில்லை! யாரோ ஒரு நல்ல மனிதர், என் அலைச்சலைக் கண்டு இரக்கப்பட்டார் போலும். ''ஆயிரம்விளக்கு ரோடு பக்கம் இப்படியே போனால் அதைப் பார்க்கலாம். திடீரென்று அது அங்கே மறைந்து விடும். பிறகு எதிராஜ் மகளிர் கல்லூரியின் பின்புறம் அது செல்வதாகக் கேள்வி! எனக்கும் நேரில் பார்த்து அநுபவமில்லை. எதற்கும் போய்ப் பாருங்கள்!'' என்று சொன்னார்.

டாக்ஸி மேலே ஓடிற்று! பாதசாரி நண்பர் கூறியவாறுதான், அந்தப் பொல்லாத கூவம் ஆயிரம் விளக்குப் பகுதிக்குப் போவது போல் போக்குக் காட்டிவிட்டு, எதிராஜ் கல்லூரிக்குப் பின்புறம் வந்ததும் சட்டென்று வடக்கு நோக்கித் திரும்பிவிட்டது! ஆனால் நானும் சளைத்துவிடவில்லை. எங்கேயெல்லாமோ அதைத் தேடி அலைந்து விட்டு, 'கன்னிமாரா ஹோட்டல்' அருகே வரும்போது அது அகப்பட்டுக் கொண்டது.

''ஓஹ்ஹோ! இங்கே போகிறாயா நீ! அட, திமிர் பிடித்த நதியே!'' என்று அதன் மீது சில அர்ச்சனைகளைப் பொழிந்துவிட்டு, அதன் போக்கைப் பின்தொடர்ந்தேன். ஆமாம், டாக்ஸியிலிருந்து இன்னும் நான் இறங்கவில்லை.

எதிராஜ் கல்லூரிக்கும் ஆர்ட்ஸ் கல்லூரிக்கும் இடையில் உள்ள ஒரு பாலத்தின் வழியே



செல்லும் கூவம், லேசாக இப்போது கிழக்கே ஒரு திரும்பு திரும்புகிறது. ராஜரத்தினம் போலீஸ் விளையாட்டு அரங்கத்தின் எல்லையை விளையாட்டுக்குத் தொடுவது போல் தொட்டு விட்டு, நேராக ஓடுகிறது. நெருக்கடி மிகுந்த மவுண்டு ரோடு சினிமாத் தியேட்டர் பகுதிகள் பக்கம் தலையைக் காட்டிவிட்டு, சிந்தாதிரிப் பேட்டையைத் தொட்டுக் கொண்டு மறுபடியும் எழும்பூர் வருகிறது. பிறகு ஒரு திடீர் மறைவு! அல்ல, அல்ல, ஒளிவு! அரசினர் சித்திரக் கல்லூரி அருகே மீண்டும் அது காணாமற் போய் விடுகிறது.

டாக்ஸிக்காரர் கத்துகிறார்: ''சார், எனக்குக் கணக்குப் பார்த்துக் கொடுத்து விடுங்கள். இந்தக் கூவத்தைப் பின்தொடர நம்மால் ஆகாது. அது எங்கெங்கெல்லாமோ போகிறது.... என் டாக்ஸியும் கூவம் அல்ல சார், கூவம் அல்ல..... லட்சியம் இல்லாது மனம் போனபடியெல்லாம் ஒழுங்கில்லாமல் போவதற்கு!''

கண்க்குத் தீர்த்து டாக்ஸியை அனுப்பி விட்டு, நதியைத் தேடும் முயற்சியில் கால்களின் துணையை நாடுகிறேன்.

சித்திரக் கல்லூரிக்கு அருகே டிமிக்கி கொடுத்த கூவம், பிறகு சிந்தாதிரிப்



பேட்டைக்குள் புகுந்து சிறைச்சாலே மதில் சுவர் ஓரமாக நெளிகிறது. பின்னர் அது எங்கே போய் விடுகிறதோ, எப்படி மறைந்து விடுகிறதோ அது ஒரு விளங்காத புதிராகி விடுகிறது.

இதைப் பற்றிச் சிலரைக் கேட்ட போது, சென்டிரல் ஸ்டேஷனுக்கு அருகேயுள்ள பாலத்துக்கு அடியில் போவதாக அவர்கள் கூறினார்கள். இது தவறு என்றும், பாலத்துக்கு அடியில் போவது பக்கிங்ஹாம் கால்வாய் என்றும் வேறு சிலர் கூறினார்கள்.

இந்தக் கால்வாய் வழியாகவே போய்ப் பார்த்தால், சென்னை பெரிய மருத்துவ சாலேப் பக்கமாகச் சென்று ஐலந்து மைதானத்துக்கு எதிரே கடற்கரையில் உள்ள சர்வகலா சாலே வரை வந்து விடுகிறோம். அங்கு இந்தக் கால்வாயுடன் எங்கிருந்தோ வந்து கலந்து கடலில் விழுகிறது கூவம் !

கடலில் விழும்படியாக என்ன நேர்ந்து விட்டது அதற்கு? யாராவது அதைக் கொடுமைப்படுத்தி விட்டார்களா? இங்கே எப்படி வந்து சேர்ந்தது? எந்தச் சந்து பொந்திலாவது மறைந்து திரிந்துவிட்டு இங்கு வந்து சேர்ந்ததா ?

இதைப் பற்றி ஒரு நுட்பறியும் நிபுணரைக் கேட்டதற்கு அவர் பதில் சொல்ல முடியாமல் கையை விரித்து விட்டார்! "இந்தப் பரீட்சையில் நான் இறங்கினல் நிச்சயம் தோற்றுப் போனலும் போய் விடுவேன். இது ஒரு மர்மம்தான், சந்தேகமில்லே. பேர்வழி (கூவம் நதியைத்தான் குறிப்பிடுகிறர்) சிந்தாதிரிப் பேட்டை டிவிஷனில், சிறைச்சாலே மதில்சுவர் அருகே காணப்படுகிறன். பிறகு மறைந்து விடுகிறன். அப்புறம் அவனே மவுண்டுரோடு கவர்னர் மாளிகை எஸ்டேட் ஓரமாகப் பார்க்கிறோம். சற்று நன்ருகக் கவனிக்கும் போது, நட்டநடு மவுண்ட் ரோடில் டிரான்ஸ்போர்ட் ஆபீஸ் அருகே ஜனநெருக்கடியும் போக்குவரத்தும் மிகுந்த ஓர் இடத்தில் உள்ள பாலத்துக்கு அடியில் பேர்வழி மெள்ள மெள்ள நகர்வதைப் பார்க்கிறோம். இந்தத் தடயங்களை வைத்துக் கொண்டு மாத்திரம் அவன் வந்த விதத்தைக் கண்டு பிடித்துவிட முடியாது!" என்கிறர் அந்த நிபுணர். அவர் குறிப்பிட்ட பாலத்துக்கு அருகேதான் சிந்தாதிரிப்பேட்டை நேப்பியர் பார்க்கும் இருக்கிறது. சிலர் அங்கு கூவத்தைப் பார்ப்பதாகச் சொல்கிறர்கள்.



கூவத்தைச் சீர்திருத்தம் செய்து அதை அழகுற அமைத்துத் தர அரசாங்கம் முன் வந்திருக்கிறது. பாராட்ட வேண்டிய முயற்சிதான். சீர்திருத்தம் என்றல் தண்ணீரைச் சுத்தப்படுத்துவதை மட்டும் சொல்கிறர்கள். ஆனல் ஒதுங்கிப் பதுங்கிச் செல்லும் திருடனைச் சீர்திருத்துவது போலவும் கூவத்தைச் சீர்திருத்த வேண்டும். தண்ணீரைச் சீர்திருத்தி அழகுற அதனை அமைத்துத் தந்தபின், "எங்கே கூவத்தின் போக்கைக் கண்டு பிடியுங்கள், பார்க்கலாம்!" என்று கூவி, அரசாங்கம் பந்தயங்களும்நடத்தலாம். இந்தப் பந்தயம் வெளியூரிலிருந்து டூரிஸ்டுகளையும் நகருக்கு இழுத்து, இந்தச் சர்வதேசச் சுற்றுலா ஆண்டில் ஒரு மகத்துவத்தை ஏற்படுத்தித் தருமென்பதில் ஐயமில்லே.

## மாருட்டம் கண்ட மராட்டிப் பெயர்கள்

சில மராட்டிப் பெயர்களை மராட்டியர் எப்படி உச்சரிக்கின்றனர் என்று பாருங்கள்: சவாண் (சவான்); பாட்டீல் (பட்டேல்); காட்கீள் (காட்கில்); பாள் டாக்கரே (பால் தாக்கரே); பாள் கங்காதர் டிளக் (பால கங்காதர திலக்); டாணெ (தாணு); புணெ (புனு); பேளகாம் (பெல்காம்); ஹுப்பள்ளி (ஹுப்ளி). —கே. ஆர். பத்மனுபன்

## புண்ணியவான் கடை

"இங்கு பாவிக்கும் புடவை விற்கப்படும்." இப்படி ஓர் அறிவிப்பு ஒரு ஜவுளிக் கடை வாசலில். என்ன விழிக்கிறீர்கள்? 'பாவமாவது புண்ணியமாவது' என்ரு? இது இலங்கைத் தமிழ். 'பாவிக்கும்' என்றல் பாவம் செய்தவர்களுக்கும் என்று அர்த்தம் அல்ல! 'சாயம் போகாத' என்று அர்த்தம்!

— ஆர். எம். ராவ்

மகத்தான
தொல்பழங் காலச்
சிறப்பின் பிரதிபலிப்பு

மபத்லால் க்ரூப்
வாயில்களின்
மணியான வனப்பு
மறுமலர்ச்சி, மறைந்திட்ட
மரீபின் மறுபிறப்பு.



**மபத்லால் க்ரூப்**

**2x2 வாயில்கள் & லினேக்கள்**

'டெரீன்/காட்டன்', 'டெபிலேஸ்டு'
மற்றும் 'ம.:பினேஸ்டு' தாம்,

நியு ஷராக், (ஷராக்) அஹமதாபாத் . நியு ஷராக், நாடியாத் . ஸ்டேன்டர்ட், பம்பாய் . ஸ்டேன்டர்ட், (நியு சைனு) பம்பாய் . ஸ்டேன்டர்ட், தேவாஸ் ஸாஸுன், பம்பாய் . ஸாஸுன், (நியு யூனியன்) பம்பாய் . ஸுரத் காட்டன், ஸுரத் மபத்லால் பைன், நவ்ஸாரி . மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அஹமதாபாத்

M. 201 TM



# விரல்கள் பேசுமா?

கே. பி. நீலமணி

"அப்பா....!"

அப்பொழுதுதான் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்த சிவராமன் குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தான்.

சிரித்தபடி கையில் ஒரு பரிசுக் கோப்பையை ஏந்திய வண்ணம் கருணா அங்கே நின்று கொண்டு இருந்தாள்.

அது ஒரு ரோலிங் கப். அவளுடைய கல்லூரியில் பாரதியார் தினத்தையொட்டி ஒவ்வொரு வருஷமும் கலைவிழா நடக்கும். அதில் பாட்டுப் போட்டிக்கான பரிசைத் தவறாமல் கருணாதான் தட்டிக் கொண்டு வந்து விடுவாள். அதேதான் இந்த வருஷமும் நடந்திருக்கிறது. சுழற்கோப்பை அவர்கள் வீட்டுக்குள்ளேயே சுழன்று கொண்டிருந்தது.

"ஏன் கருணா.... ஒவ்வொரு வருஷமும் பரிசு உன்னையும், பரிசை நீயும் விடமாட்டீர்கள் போலிருக்கே! பாக்கிப் பேருக்கெல்லாம் உன் மேலே பொறாமைதான் ஏற்படப் போறது" என்றான் சிவராமன் வேடிக்கையாக.

ஆனால் அதில் பெருமையும் கலந்திருப்பதைப் புரிந்து கொள்ளாமலே கருணா, "நான் என்னப்பா அவர்களோடு குஸ்தி போட்டா கோப்பையைப் பிடுங்கிக் கொண்டு வந்திருக்கிறேன்? நன்னாப் பாடினா அவர்களுக்கும் கிடைக்கிறது" என்றாள்.

"அதெப்படியம்மா! சங்கீதம் என்ன அப்படி எல்லாருக்குமே அத்தனை கலபத்திலே வந்துவிடுகிறதா? கத்துண்டோ..... சொல்லிக் கொடுத்தோ கடம் போட்டோ மட்டும் அடையக்கூடியதில்லையே கருணா சங்கீதம். அதுக்குப் பூர்வ ஜென்மத்திலே புண்ணியம் செஞ்சிருக்கணும். அதோட பிர்மாவும் தலையிலே எழுதியிருக்கணும்" என்று சிவராமன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே கூடத்தில் ஏதோ நிழலாட்டம் தெரிவது போல் இருக்கிறது. பாதியில் அறுந்த 'டேப்'பைப் போல சிவராமன் 'டப்' பென்று தன்னுடைய சங்கீத உபந்நியாஸத்தை நிறுத்தினான்.

"ஏன் அப்பா, வீணை டீச்சரை இன்னிக்குப் போய்ப் பார்த்து விட்டு வரதாச் சொன்னேளே. ஏற்பாடு பண்ணியாச்சா....?" என்று கருணா ஆர்வத்துடன் கேட்டாள்.

"ஓ! பார்த்தாச்சு, கருணா. நாளையிலிருந்து உனக்குப் பாடம் ஆரம்பம். சாயங்காலம் ஆறு மணிக்கு வாத்தியார் இங்கே வந்து விடுவார்."

"என்னப்பா, இது! போயும் போயும் நாளைக்குப் பார்த்து வரச் சொல்லியிருக்கேளே.... நான், கீதா, அவ அண்ணா, தம்பி குமார் எல்லாரும் மகாபலிபுரம் போறதா புரோகிராம் 'பிக்ஸ்' பண்ணியிருக்கோம்னு சொல்லலியா?" என்று சிணுங்கினாள் கருணா.

"அதனால் என்ன கருணா, ராத்திரியே பாட்டு வாத்தியாரைப் பார்த்து, வேறே ஒரு நல்ல நாளா பார்த்து வரச் சொன்னாப் போச்சு."

"அப்படியே செய்யுங்கப்பா. புது வீணை எப்போ வாங்கறதாம்?" என்ற கருணாவின் குரலில் ஆர்வம் துள்ளியது.

"இப்போ புது வீணை வாங்க வேண்டாம்னு வாத்தியார் சொல்லிட்டார் கருணா. எதிர் வீணை போட்டுச் சொல்லிக் கொடுக்க ரெண்டு மாசம் போகணுமாம். அதுவரை ஆரம்பப் பாடத்துக்கு இங்கே இருக்கிற அம்மாவோட வீணையே போதுமாம். நீ வர்றதுக்குள்ளே பரணையிலேயிருந்து அதை நான் எடுத்து ரெடி பண்ணி வைச்சுடறேன்" என்று சிவராமன் கூறிக் கொண்டிருக்கும் போதே மெட்டிகள் ஒலிக்க அங்கு வந்த மீனா குனிந்த தலை நிமிராமல் கையிலிருந்த காப்பியை மேஜை மீது வைத்து விட்டுத் திரும்பிப் போனாள்.

சிவராமன் பெண் பக்கம் திரும்பி, "கருணா, பரிசுப் பொருளை அம்மாகிட்டே காட்டினாயா?" என்று ஆவலோடு கேட்டான்.

கருணா அலட்சியமாக ஒரு முறை சூள் கொட்டிவிட்டு, "அம்மாவுக்குத்தான் நான் பாடறதே பிடிக்கலியே அப்பா! பரிசை வேறே கொண்டு போய்க் காட்டினால் ஆத்திரம்தான் வரும். அம்மா பிரமாதமா வீணை வாசிப்பா, பாட்டுப் பாடுவான்னு எல்லாரும் சொல்றா. ஆனா இந்த அம்மா எனக்கு ஒரு பாட்டாவது சொல்லிக் கொடுத்திருக்காளா, இல்லே..... அட் லீஸ்ட் என்னை என்கரேஜ் ஆவது பண்ணியிருக்காளா? நான் அப்படி என்ன தப்புப் பண்ணினேன் அப்பா?"

கருணா வார்த்தைகளை முடிக்கவில்லை. சவுக்கைச் சுழற்றி அடித்தாற்போல் மீனா ஒரு கணம் துடிதுடித்துப் போனாள். புடவைத் தலைப்பால் தன் வாயை மூடிக்கொண்டு வேகமாய் அங்கிருந்து போய் விட்டாள்.

கருணாவும் சிவராமனும் ஒருவரை ஒருவர் மாறி மாறிப் பார்த்துக் கொண்டனர்.

''நான் ஏதாவது தவறாகப் பேசிட்டேனா அப்பா ?'' என்று பயந்து போய்க் கேட்ட மகளிடம், சிவராமனால் உண்மையை விண்டு கூற முடியவில்லை. ''அம்மாவை ஒண்ணும் சொல்லாதே கருணா'' என்ற ஒரு வார்த்தையைத்தான் அவனால் கூற முடிந்தது.

மறுநாள் காலை. சரியாகக் குறிப்பிட்ட நேரத்துக்கு அவர்கள் வீட்டுக் காம்பவுண்டுக்குள் இரண்டு ஸ்கூட்டர்கள் வந்து நின்றன. ஒன்றில் கீதாவின் அண்ணனும், தம்பி குமாரும் இருந்தனர். மற்றொன்றை கீதா ஓட்டிக் கொண்டு வந்திருந்தாள். அதன் பின் ஸீட் கருணாவுக்காகக் காலியாக இருந்தது.

கருணா பின் ஸீட்டில் ஏறிக்கொண்டதும் கீதா ஸ்கூட்டரைக் கிளப்பினாள்.

'டாடா'வையும், 'பைபை'யையும் வாரி இறைத்தவண்ணம் இரண்டு வண்டிகளும் புறப்பட்டன. மீனாவும் சிவராமனும் சிறிது நேரம் வரை அவர்களையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு உள்ளே வந்தனர். அதன் பிறகு அவர்கள் இருவரும் வழக்கம் போல் தங்கள் தங்கள் காரியங்களுக்குத் திரும்பினர். மீனாவுக்குத் தன் காரியத்தில் மூழ்குவது சாத்தியமாக இருந்ததோ என்னவோ, சிவராமனால் அப்படி மூழ்கிப் போக முடியவில்லை.

பெற்ற மகளிடமே தூஷணைகளை ஏற்கும் நிலைக்கு மீனாவை ஆளாக்கிவிட்ட குற்றம் அவனுடையதே அல்லவா ?

ஆனால் இந்த விழிப்பு — காலம் கடந்த ஒரு விழிப்பு — யாருக்கு வேண்டும் ? நீருக்காக வாடும் பயிர் போல் இசைக்காக ஏங்கி ஏங்கி ஏமாந்து இடிந்து போன மீனாவின் உள்ளத்தில் மீண்டும் பழைய இன்பத்தையும் மகிழ்ச்சியையும் தோற்றுவித்துவிட முடியுமா ?

சிவராமனது உள்ளச் சிலந்தி தனது எண்ண இழைகளைப் பின்னோக்கிப் பின்னிக் கொண்டிருந்தது.

செல்வம் கொழிக்கும் ஒரு சிறப்பான குடும்பத்தில், பெற்றோருக்கு ஒரே மகளாக மீனா பிறந்தாள். ஒரே மகள் என்கிற காரணத்தினாலேயே பெற்றோர் அவளைச் சீராட்டிச் சிறப்புடன் வளர்த்தனர்.

மீனாவின் தந்தைக்குச் சங்கீதம் என்றால் உயிர். பிரபல சங்கீத வித்துவான்களில் அவருக்குத் தெரியாதவர்கள் கிடையாது.

பள்ளியில் படிக்கும் போதே மீனாவின் இனிமையான குரலைக் கேட்டு ஊர் புகழ்ந்தது. உள்ளூர் வீணை வித்துவான் ராம பாகவதரிடம் அவளுக்கு வீணைப் பயிற்சியும் தொடங்கப்பட்டது.

மீனாவின் பிஞ்சு விரல்கள் அநாயாசமாகத் தந்திகளின் மீது ஓடி விளையாடி, விதம் விதமான ஒலிகளை எழுப்பும் போது பெற்றோரும் மற்றோரும் உள்ளம் குளிர்ந்தனர்.

பத்தாவது படித்து முடிப்பதற்குள் சுமார் முப்பது வர்ணங்களும், அறுபது எழுபது கீர்த்தனைகளும் மீனாவுக்குப் பாடமாகி விட்டன.

பெற்றவர்கள் பிரமித்தனர்; கேட்டவர்கள் தங்களை மறந்தனர். ராகமும், பாவமும், ஸ்வரக் கோவைகளும் மீனாவிடம் கொஞ்சி விளையாடின. ஒவ்வொரு வருஷமும் சங்கீதப் போட்டியில் பரிசு மீனாவுக்குத்தான் குத்தகை. வீணையில் வாணி என்று அனைவருமே புகழ்ந்தனர்.

அத்தரையும் ஜவ்வாதையும் மறைத்து வைக்க முடியுமா? எப்படியும் அதன் இனிய சுகந்தம் வெளியே பரவத்தானே செய்யும்? அப்படித்தான் ஆயிற்று மீனாவின் வீணை வாசிப்பும்.

''இத்தனை அருமையான சங்கீதத்தைப் பத்துப் பேர் கேட்டு ஆனந்திக்காமல் வீட்டுக்குள்ளேயே அடைத்து வைக்கலாமா?'' என்று வருவோரும் போவோரும் சொல்லிக் கொண்டே இருந்தனர்.

பெற்றோர்கள் முதலில் சிறிது தயங்கினர். பிறகு 'தெரிந்தவர்கள் வீட்டில்தானே' என்று ஆரம்பமானது, நாளடைவில், 'பழக்கமானால் எல்லோரும் தெரிந்தவர்கள்தான்' என்கிற தெம்பையும், புகழ்வெறியையும் ஏற்படச் செய்தது. வரவரக் கல்யாணக் கச்சேரி, சபாக் கச்சேரிகள், ரேடியோவில் புரோகிராம் என்று மாறி மாறி, மீனாவின் குரலும் விரலும் ககன வீதியில் ஒலித்தன. இந்தச் சமயத்தில்தான் மீனாவுக்குத் திருமணம் நிச்சயமாயிற்று.

மீனாவின் அழகையும், அவள் பாட்டையும் வீணை வாசிப்பையும் கேட்டுத் திணறிப் போன சிவராமன் மறுவார்த்தை பேசாமல் அம்மாவுடன் சேர்ந்து கொண்டு 'சம்மதம்' என்று தலையை ஆட்டிவிட்டான். கல்யாணமும் கோலாகலமாக நடந்தது.

சிவராமனுக்கு ஒன்றுவிட்ட அத்தை ஒருத்தி இருந்தாள். அவளுக்குத் தன் பெண்ணைச் சிவராமன் தலையில் கட்ட முடியாதது நெஞ்சில் ஆறாத புண்ணாக இருந்தது. அவளுடைய வர்மம் மீனாவின் மீது திரும்பியது.

அத்தையின் துர்ப்போதனை சிவராமனின் தாயிடம் வேலை செய்யத் தொடங்கிவிட்டது. முதலில் வெளியே வீணை வாசிக்கத் தடை விதிக்கப்பட்டது. சிறிது காலத்துக்குப்பின் வீட்டோடு வீணை வாசிக்கவும் அனுமதி மறுக்கப்பட்டது. வீட்டில் வீணை பழகும் போதே ஒரு நாள், ''இது என்ன, குடித்தனம் பண்ணுகிற வீடுதானா....?'' என்று மாமியார் மீனாவிடம் பிரமாதமாக இரைந்தாள்.

அதைக் கேட்டுக் கொண்டே ஆபீஸிலிருந்து வந்த மகனிடம் தாயார், ''சிவா, முதல்லே அந்த வீணையைப் பிடுங்கிப் பரண் மேலே போடு. அப்புறம்தான் இந்த வீடு உருப்படும்'' என்று கோபத்தோடு உத்தரவிட்டாள். மகனும் தாயாரின் வார்த்தைக்கு எதிர் வார்த்தை கூறாமல் வீணையைப் பரண் மீது தூக்கி வைத்துவிட்டு இறங்கினான்.

அன்று இறங்கிய அதே பரண் மீதுதான் இன்று சிவராமன் ஏறுகிறான். அதுவும் புறக்கணிக்கப்பட்ட வீணையைத் தன் மகளுக்

அமுல் அளிக்கும் புதுமை!

# அமுல்ஸ்ப்ரே

## புரதச் சத்துச் செறிந்த குழந்தை உணவு




உடல் வளர்ச்சிக்கான
புரதம் இதைவிட
அதிகமாக அடங்கிய
பாலுணவு வேறில்லை!





**கரைய 20 வினாடிகள் கூட ஆகாது . . . ஜீரணிக்க எளிது.**

நாலு மடங்கு எடை ஏறும்படி, முதல் இரு ஆண்டுகளில் உங்கள் குழந்தை அதிவேகமாக வளரும்; அதற்கு பெரும்பாலும் ஆதாரம்: புரதச்சத்து. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதத்தை உங்கள் குழந்தைக்கு அளிக்கிறது அமுல்ஸ்ப்ரே.

**வைட்டமின்கள், வேறு பல நலன்கள் எல்லாமடங்கியது.**

அவசியமான வைட்டமின்களும் அடங்கப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, உலோக தாதுக்கள், குழந்தையின் வளர்ச்சிக்குரிய இதர ஊட்டப் பொருள்கள் யாவும் உகந்த விகிதங்களிலே பொருந்தப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. நியாஸின், சோடியம் ஐயோடைட், ஃபாலிக அமிலம் ஆகியவையும் இயல்பான வடிவிலே இடம் பெற்றுள்ளன.

**ஜீரணிக்க எளிது.**

ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் கையாளப்படும் ஸ்ப்ரே-ட்ரை செய்முறை மூலம் ஆக்கம் பெறுகிறது அமுல்ஸ்ப்ரே. உயரிய ஜீரணத் தன்மையை அளிக்கிறது அம்மேலான முறை; பாலின் புரதச் செழிப்பையும் பண்பையும் மேம்படப் பாதுகாக்கிறது.

**அற்புதமாகக் கரையும்:**

விழுது குழைக்கத் தேவையில்லை. முழு அளவு வெந்நீரிலே அமுல்ஸ்ப்ரே சேர்த்து, நன்கு கலக்கினால் 20 வினாடிகள் ஆவதற்குள் தயார். நிப்புள் துளைகளை அடைத்துக் கொள்ளாது.

**உங்கள் குழந்தைக்கு உகந்தது அமுல்ஸ்ப்ரே!**



அமுல்ஸ்ப்ரே 500 கிராம் டப்பாக்களில் வருகிறது. (1 பவுண்டுக்கு 46 கிராம் அதிகம்).

*ASP/AS-1/67-TM*

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.

கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூசர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

சென்னை, கேரள, ஆந்திர மாநிலங்களில் விநியோகிக்கப்படுகிறது

காகவே எடுக்க. இதற்கிடையில் காலத்தின் போக்கில்தான் எத்தனை மாறுதல்கள் ?

ஒரு புனிதமான கலையை முடக்கி, மீனுவின் கையிலிருந்த வீணையைப் பிடுங்கி வாசிக்கக் கூடாது என்று பரண் மீது ஏற்றிய அம்மா இன்று எங்கே ?

தென்றல் வீசாமல் இருக்கலாம்—மலர்கள் மலராமல் அரும்பாகவே வாடி உதிரலாம்—ஆனால் பாடாமல் வானம்பாடியாலும், கூவாமல் குயிலாலும் இருக்க முடியுமா ?

தன்னுடைய சங்கீதத்துக்கு அந்த வீட்டில் மதிப்பில்லை—இடமில்லை என்று உணரப்பட்ட பின்பும் அதற்காகச் சிறிதும் வருந்தியவளாகவே காட்டிக் கொள்ளாமல் — எப்படி அந்த வீட்டில் தன்னை ஒரு பணிவுள்ள வேலைக்காரியாகவே மாற்றிக் கொண்டு மீனு வாழத் தொடங்கினாள் ?

தரையில் உருட்டிவிடப்பட்ட பாதரசம் போல், விருப்பு வெறுப்புக்களில் பற்றின்றி அதில் வாழும் ஆத்ம பலத்தையும் அடக்கத்தையும், இசைக் கலைதான் அவளுக்கு அப்படியொரு வரமாக அளித்திருந்ததோ? வாய் விட்டுப் பாடா விட்டாலும் மகிழ்ச்சியும், சோகமும், இசையும் — இன்பமும் ஆத்மானுபவமாய், இதய கீதமாய் அவள் உள்ளத்தினுள்ளே ஒலித்துக் கொண்டே இருந்திருக்க வேண்டும். அந்த நாதக் கடலின் பூரிப்பு அவள் ஒருத்திக்குத்தான் சொந்தமே ஒழிய அதன் அலையோசைகூடச் சிவராமனுக்கு எட்ட மீனு ஒரு நாளும் விட்டதில்லை.

சிவராமனும் தன்னுடைய ஆண்மைக்குரிய மிடுக்குடனேயே அத்தனை காலத்தை ஓட்டிவிட்டான். தாயாருக்குப் பிறகும், 'உன் தயவில்லாமலே கருணையை வளர்க்க—அவள் விருப்பு வெறுப்புக்களைப் பூர்த்திசெய்ய முடியும்' என்கிற இறுமாப்பிலேயேதான் சிவராமன் அவளை வளர்த்து விட்டான். அதனாலேயே எதற்கும் அவள் தந்தையின் தயவை நாடினாள்.

அழுத்தமாக இருந்த அதே சிவராமன் இப்போது கருணைக்காக மீனுவின் வீணையை எடுக்கப் பரண்மீது ஏறியதும்தான் ஒரேயடியாய்க் குழம்பினான். ஏதோ மிகப் பெரிய கொடுமை — தவறு செய்து விட்டது போன்ற ஒரு வேதனை உணர்ச்சி மாறி மாறி அவன் இதயத்தை வந்து தாக்குவது போல் இருந்தது.

நடுங்கும் கரத்துடன் துணி போர்த்திருந்த அந்த வீணையைத் தூக்கப் போன சிவராமன் மறுகணம் தன்னையும் மீறி, 'வீல்' என்று கத்திவிட்டான், ஏதோ அரவத்தைத் தீண்டி விட்டவனைப் போல்.

கூச்சலைக் கேட்டுப் பதறி ஓடி வந்த மீனு, ''என்ன.... என்ன.....?'' என்று துடித்துப்போனாள்.

''ஐயோ.... மீனு....!'' என்று மேலிருந்தபடியே நாக்குழறிய சிவராமன் நடுங்கியபடியே தன் கைகளை நீட்டினான். அதில் —

இரண்டு பிடி மண்தான் இருந்தது.

பரண் மீது அன்று சிவராமன் வைத்த மீனுவின் வீணைக்குப் பதில், இப்போது அங்கிருந்தது வீணையல்ல. இரக்கமே இன்றி, காலத்தால் அத்தனையையும் தின்று தீர்த்த கறையான்புற்று மண்தான் அங்கு காட்சியளித்தது.




''சர்க்கரை கோட்டாவை குறைச்சிட்டே வராங்களே! இனி, லிலோ கணக்குக்கும் பதில் ஸ்பூன் கணக்குப்படி தரப்போறாங்களாம்! அதான் எல்லோரும் காபியுடன் தயாராகக் கியூவில் நிற்கிறார்கள்.''

---

பரண் மீதிருந்து தலைகுப்புற விழாமல், எப்படிப் பத்திரமாகக் கீழே இறங்கி வந்தோம் என்பதே சிவராமனுக்கு நினைவில்லை. பச்சைக் குழந்தையைப் போல் அழுத சிவராமனை மீனுதான் தேற்றினாள்.

''இதுக்காக இப்படி யாராவது வருத்தப் படுவாளா ? அதுதான் ரொம்பப் பழைய வீணையாச்சே! கருணைக்காகப் புதிசா வேறே வாங்கினாப் போச்சு.''

வீணைக்கு நேர்ந்துவிட்ட கதிக்காக மட்டுமா அவன் அப்படிக் கண்ணீர் வடிக்கிறான் ? அந்தக் கறையான்கள் மரத்தினால் ஆன வீணையை மட்டும்தானா அப்படித் தின்று மண்ணாக்கி இருக்கின்றன?

உடைந்த வீணைக்குப் பதில் புதிதாக வாங்கிவிட முடியும். ஆனால் அதை இசைப்பவளின் இதயமே உடைந்துவிட்டால்....?

சிவராமன் துடித்தான். ''மீனு, உனக்கு நான் ரொம்பப் பெரிய கொடுமை—துரோகம் செஞ்சுட்டேன். இந்தப் பாவியை....'' என்று பிதற்றிய சிவராமனின் வாயைச் சட்டென்று மீனு தன் கரங்களினால் பொத்தினாள்.

விழிகளிலே கண்ணீர் மல்க, குரல் இடற மீனு கேட்டாள்: ''தப்பு நீங்க மட்டும்தானா பண்ணினேள்? அப்படியானால் என்னை யாரு மன்னிக்கிறது? பிடிவாதமும், முன்கோபமும் புருஷாளுக்கு இருக்கலாம்; அது ஒருவேளை அழகாக்கூட இருக்கும். ஆனால் என்னைப் போல் குடும்பத்திலே இருக்கிறவளுக்குத் தணிஞ்சு போகத் தோணுமே இத்தனை நீண்ட வைராக்கியம் இருக்கலாமோ?''



''உனக்கு ஞாபக மறதி அதிகம் என்பதால் நேற்றுத்தானே 'டிஸ்மிஸ்' செய்தேன்!''

''ஞாபக மறதியாக வேலைக்கு வந்துவிட்டேன் சார்!''

—ஆர். எம். ராவ்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சிவராமன் இலேசாக ஒருமுறை சிரித்தான்.

''அது உன் தப்பில்லே மீனு. ஒண்ணுமில்லா வெறும் மனுஷாளுக்கே மமதை இருக்கிறபோது உன்னுலே மட்டும் தணிஞ்சு போயிட முடியுமா? அதுதான் அந்தக் கலைக்கு இருக்கிற ஒரு தனிக் கௌரவம் மீனு.''

''போதும், இத்தனை காலம் கௌரவப் பட்டதெல்லாம். நான் ஒண்ணு சொல்லப் போறேன். கேட்பேளா?''

மீனு கெஞ்சுவது போல் அவனைப் பார்த்தாள். அவனே அப்போது அவள் எது சொன்னாலும் கேட்கச் சித்தமாயிருப்பது போல் ஆர்வத்துடன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''கருணாவுக்கு வீணை சொல்லிக் கொடுக்கிற வாத்தியார் வேலையை எனக்குக் கொடுக்கணும். தருவேளா?'' அவள் வார்த்தையை முடிக்கவில்லை. ''மீனு!'' என்று தன்னையும் மீறிக் கூறிய சிவராமன் அவளது இரு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்ட வண்ணம், ''இது நிஜமா மீனு?'' என்று சிறுபிள்ளையைப்போல் திரும்பத் திரும்பக் கேட்டான்.

''பின்னே பொய்யா சொல்றேன்?.... கருணா வர்றதுக்குள்ளே கடைக்குப் போய் வீணை வாங்கிண்டு வந்துடலாம், வரேளா?''

''இதோ, நான் ரெடி! ஆமாம், புது வீணையைப் பார்த்துட்டு அவ ஏதாவது—கேட்டா......?''

''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். இனிமேல் நான் அவளுக்கு அம்மா மட்டுமில்லே. வாத்தியாரும்கூட. அவளைச் சமாளிக்க எனக்குத் தெரியும். புறப்படுங்கோ.''

மகிழ்ச்சி மேலீட்டினால் தன்னுடைய ஆசனத்தினின்றும் துள்ளி எழுந்தான் சிவராமன். ஆனால் அத்தனை சுலபத்தில் தெய்வம் அவனை விட்டுவிட விரும்பவில்லை போலும்! டெலிபோன் மணி அலறியது. பாய்ந்து சென்று எடுத்த சிவராமன், செய்தியைச் செவி மடுத்ததும் திக்கித் திணறினான். ஒன்றும் புரியாத மீனு, கணவனது செய்கையைக் கண்டு பதறிப் போய் நின்றாள். நாக் குழறப் பேசும், கணவனிடமிருந்து விஷயத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்குள் மீனுவுக்குப் பெரும் பாடாகி விட்டது. செய்தி இதுதான்:

திடீரென்று குறுக்கே வந்துவிட்ட ஒரு லாரி மீது மோதாமல் இருக்க ஸ்கூட்டரை திதா சட்டென்று பிரேக் போட்டு ஒரு திருப்புத் திருப்பினாள். அந்த வேகத்தில் வண்டி சரிந்து, பின்னால் இருந்த கருணா உள்பட இருவருமே கீழே விழுந்துவிட்டனர். ஆனால் அதே சமயத்தில், இதைச் சற்றும் எதிர்பாராமல் வேகமாகப் பின்னால் வந்து கொண்டிருந்த குமாரின் ஸ்கூட்டர், தரையில் விழுந்து கிடந்த கருணாவின் மீது ஏறி விட்டதாம். 'உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லை, பயப்பட வேண்டாம்' என்று குமாரின் அப்பாதான் நர்ஸிங்ஹோமிலிருந்து போன் செய்திருந்தார்.

மறு நிமிஷமே மீனுவும் சிவராமனும் பதை பதைக்கும் உள்ளத்துடன் ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டனர். அங்கே கருணா மயக்க நிலையில் இருந்தாள். அவளுடைய தலையிலும், கையிலும் பலத்த கட்டுக்கள் போடப்பட்டிருந்தன. பக்கத்துக் கட்டிலில் இருந்த திதாவுக்கும் உதட்டிலும் தலையிலும் சிறு சிறு காயங்கள்.

''கவலைப்பட வேண்டியதில்லை. அதிர்ஷ்டவசமாக இருவருமே தப்பித்துக் கொண்டனர். ஆனால் கருணாவின் ஒரு கையில்தான் பலமான அடி. விரல்களின் மீதே சக்கரம் ஏறிவிட்டது. எதற்கும் முடிவு பற்றி எக்ஸ்ரே வந்த பிறகு தான் சொல்ல முடியும்'' என்று டாக்டர் சிவராமனுக்கு விளக்கினார்.

வேகமாக வராந்தாவுக்கு வந்துவிட்ட மீனுவைத் தொடர்ந்து வந்த சிவராமன், ''மீனு'' என்று தலையைக் கவிழ்த்தவாறு குலுங்கி அழுதான்.

வீணை பயிலப் போகிற கருணாவுக்கு உயிரே போன்றவையல்லவா விரல்கள்? அதன் மீது சக்கரம் ஏறி விட்டால்.....?

''மீனு, நீ என்னை மன்னித்தாலும் தெய்வம் என்னை மன்னிக்கத் தயாராக இல்லை. கருணாவின் பிஞ்சு விரல்கள்......''

சட்டென்று கணவனது வாயைப் பொத்தினாள் மீனு. அவளது விழிகளும் குளமாயின. ''அப்படி ஒன்றும் ஒருக்காலும் நேராது. கருணாவுக்கு வீணை சொல்லிக் கொடுக்கத் தான் போகிறேன். இத்தனை காலத்துக்குப் பிறகு அவள் மூலமாவது கிடைக்கப் போகிற அந்தப் பாக்கியத்தையும் தெய்வம் என்கிட்டேயிருந்து ஒருகாலும் தட்டிப் பறிச்சிண்டுடாது'' என்று உணர்ச்சிவசப்பட்டுக் கூறினாள்.

அவ்வழியாகச் சென்ற டாக்டரைக் கண்டதும், தன் இரு கைகளையும் கூப்பி, ''எப்படியாவது என் கருணாவின் கையைச் சரியாக்கி விடுங்கள், டாக்டர்'' என்று தன்னையும் மீறிக் கதறி அழுதாள்.

டாக்டர் அவளிடம், ''அமைதியாக இருங்கள், அம்மா! எக்ஸ்ரேயில் பார்த்தபின் ஒருவேளை கையில் முறிவேயில்லை என்று தெரிந்தாலும் தெரியக்கூடும்'' என்றார்.

அந்த எக்ஸ்ரேயில் தெரியப் போவது கருணாவின் விரல்களைப் பற்றிய அறிவிப்பு மட்டும்தானா? இரு உள்ளங்களின் விவரிக்க முடியாத அபிலாஷைகளின் நாடித் துடிப்பையே அல்லவா அந்த எக்ஸ்ரே டாம் நிர்ணயிக்கப் போகிறது!

# படித்துப் பாருங்கள் !

## BHAVAN'S JOURNAL (Annual 1967)

பாரத நாட்டிலேயே ஆன்மிக சஞ்சிகைகளில் தலைமை ஸ்தானம் பெற்றது 'பவன்ஸ் ஜர்னல்'. உயர்ந்த சமய தத்துவங்களை மக்களனைவருக்கும் ரஞ்சகமான முறையில் வழங்கி வரும் இப்பத்திரிகையின் ஆண்டு மலர்கள் கருத்துக் கருவூலங்களாகவே விளங்கும். இவ்வருடத்து மலரும் இதற்கேற்ப கண்ணுக்கும், அறிவுக்கும், இதயத்துக்கும் களிப்பூட்டுவதாக அமைந்துள்ளது. வியாஸரிலிருந்து தொடங்கி ரமண பகவான் வரை வந்துள்ள மகான்களின் உபதேசங்களைக் காண்கிறோம். இன்று சங்கராசாரிய பீடங்களிலுள்ள சான்றோர், மற்றும் வி. வி. கிரி, கரன்சிங், காகா கலேல்கர், ஆர். ஆர். திவாகர் முதலிய பெரியோர்களின் பொருள் மிகுந்த கட்டுரைகளைத் தாங்கி வருகிறது இவ்வாண்டு மலர். பவன் ஸ்தாபகர் குலபதி முன்ஷியின் கடிதத்தோடு, ஸ்ரீமதி லீலாவதி முன்ஷி பெண்களின் குடும்ப வாழ்வு பற்றி எழுதியுள்ள கட்டுரையும் மலருக்கு அணி செய்கிறது.

வெளியீடு: Bharatiya Vidya Bhavan, Chowpatty Road, Bombay-7; விலை: ரூ. 1.

## யஜுர்வேத ஸந்த்யாதி

உலகாயதமாகவே மாறியதன் தீமைகளை ஓரளவு உணர்ந்து மக்கள் இப்போது வைதிக கர்ம அநுஷ்டானங்களில் சிறிதளவு பற்றுதல் கொண்டு வருகிறார்கள். அவர்களுக்கு அந்த அநுஷ்டானங்களில் ஈடுபடப் பேருதவி அளிக்கும் ஒரு நூல் இது. யஜுர்வேதிகளுக்குரிய ஸந்த்யாவந்தனம், சமிதாதானம், பிரம்மயக்ஞம், உபாகர்ம விதிமுறைகள் இவற்றை ஆசிரியரவர்கள் வெகு நுணுக்கமாகத் தொகுத்தளித்துள்ளார். அதோடு ஸ்ரீருத்ரம், சமகம், புருஷ ஸூக்தம், ஸ்ரீஸூக்தம், துர்காஸூக்தம், ஆயுஷ்ய ஸூக்தம் ஆகிய வேதத் துதிகளையும் ஸ்வரக் குறிப்புடன் தமிழில் பொருள் தந்து விளக்கியுள்ளார். விஷ்ணு சகஸ்ரநாமம், வேங்கடேச சுப்ரபாதம் இவற்றையும் சேர்த்து விட்டதால், இந்நூல் நமது சநாதன தர்மத்தின் சாராம்சத்தையே தன்னுள் கொண்டிருப்பதாகச் சொல்லலாம்.

தொகுப்பாசிரியர்: ஸ்ரீவத்ஸ வெ. ஸோம தேவசர்மா. கிடைக்குமிடம்: குருகுலம், 2, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை – 33; விலை: ரூ. 2–50.

## ஸாம, ருக்வேத ஸந்த்யாவந்தனம்

ஸாம வேதக்காரர்களும், ருக்வேதிகளும் தங்களுக்குரிய வைதிக கரும கிரந்தங்கள் கிடைக்காமல் சிரமப்படும் சமயத்தில் துணையாக வந்து நிற்கிறது இந்நூல். படித்து மறக்காமல் அன்றாடம் மூன்று வேளையும் காரியத்தில் நடத்திக் காட்ட வேண்டிய ஜீவாதாரமான கருமத்தைச் சொல்வது இப்புத்தகம். சந்தியா கருமாவை விட்ட ருக், ஸாம வேதிகள் அவசியம் பயன்படுத்திக் கொண்டாக வேண்டிய பதிப்பு.

தொகுப்பாசிரியர்: ஸ்ரீவத்ஸ வெ. ஸோம தேவசர்மா; வெளியீடு: குருகுலம், 2, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை – 35; விலை: ரூ. 1.

## இன்னமுதம்

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய சைவ சமய குரவர்கள் பாடியருளியுள்ள தேவாரப் பாடல்களுடன் திருவாசகம், திருமந்திரம், திருவிசைப்பா, பெரிய புராணம் முதலியவையும் திருமுறைகளில் அடங்கும். இப்பாடல்களிலிருந்து பொறுக்கி எடுத்த மணிகளை விளக்கவுரையுடன் வெளியிட்டிருக்கும் சுதேசமித்திரன் நிறுவனத்தார் இசைக்கும் தமிழுக்கும் பெரிய தொண்டு ஆற்றியிருக்கின்றனர்.

முன்னாள் முதல் அமைச்சர் திரு எம். பக்தவத்ஸலம் அவர்களின் அணிந்துரையைப் பெற்றுள்ள இந்நூலில் தமிழ்ப் பேராசிரியர் திரு அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள், பாடல்களுக்குப் பொழிப்புரையும் விளக்கவுரையும் நல்ல முறையில் எழுதியுள்ளார்.

தேவாரப் பாடல்களுக்கு ஸ்வர தாளக் குறிப்பு பேராசிரியர் எஸ். இராமநாதன் அவர்களால் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தந்தப் பண்களுக்கு நேரான இராகங்களின் பெயரைக் கொடுத்துத் தெளிவான முறையில் ஸ்வரப்படுத்தியுள்ளார்.

ஓவியர் கோபுலு அவர்களின் சித்திரங்கள் இந்நூலுக்குச் சிறப்புத் தருகின்றன.

வெளியிட்டோர்: சுதேசமித்திரன், சென்னை - 2; விலை: ரூ. 1.

## கீர்த்தன ரத்னாகரம் (முதல் பகுதி)

பூவுலகின் தெய்விகம் அவ்வளவையும் பஞ்சபூத ஸ்தலங்கள் என்ற ஐந்து க்ஷேத்திரங்கள் தேக்கிக் கொண்டிருப்பது போல் கர்நாடக சங்கீதத்தின் சிறப்புக்கள் அவ்வளவையும் தேக்கிக் கொண்டிருக்கும் ஐந்து கிருதிகளே ஸ்ரீ தியாகையரின் பஞ்சரத்ன கீர்த்தனைகள். இதைப் போல் சரளமான, சரஸமான வாக்குத் தொகுப்பையோ, ஸ்வரத் தொகுப்பையோ கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. இவ்வற்புதமான பாடல்களுக்குத் தெளிவான ஸ்வர தாளக் குறிப்புக்களும், பதத்துக்குப் பதம் தமிழ் அர்த்தமும் தருகிற இந்நூல் சங்கீத ரஸிகர்களுக்கும் வித்தியார்த்திகளுக்கும் ஓர் அரிய பரிசாகும். ஸ்ரீ தியாகராஜரின் வாழ்க்கைக் குறிப்பும் பயனுள்ள முறையில் சேர்க்கப்பட்டுள்ளது. இப்புத்தகத்துக்கு சங்கீத நாடக அகாடெமியின் நிதி உதவி கிடைத்திருப்பது மிகவும் நியாயம்.

ஆசிரியர்: என். ராஜகோபாலன்; கிடைக்குமிடம்: ஸ்ரீ மீராவித்யாலயா, 25 ட்ரஸ்ட் பாக்கம், சென்னை-28; விலை: ரூ. 2




சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் இத்தாலியில் வாழ்ந்தவர் ஆப்ஸ்தீமியஸ். ஈசாப் கதைகளைத் தழுவியும் சொந்தமாகவும் லத்தீன் மொழியில் குட்டிக் கதைகள் எழுதிய இந்த ஆசிரியரைப் பற்றி வேறு விவரம் எதுவும் தெரியவில்லை.

### ஈயும் சக்கரமும்

ஓடுகிற வண்டியின் சக்கரத்தில் ஒரு ஈ போய் உட்கார்ந்தது. வண்டிக்குப் பின்னால் கிளம்பும் பெரிய புழுதிப் படலத்தைப் பார்த்தது. ''நான் எவ்வளவு புழுதியைக் கிளப்புகிறேன்!'' என்று பெருமையோடு சொல்லிக் கொண்டது.

அப்புறம், ஓடுகிற குதிரையின் மேல் போய் உட்கார்ந்தது ஈ.

''நான் குதிரையை எவ்வளவு வேகமாக ஓட்டுகிறேன்!'' என்று கம்பீரமாகச் சொல்லிக் கொண்டது.



### மெழுகும் செங்கல்லும்



ஒரு மெழுகு உருண்டை ஒரு செங்கல்லைப் பார்த்தது. உடனே பின்வருமாறு தனக்குள் சொல்லிக் கொண்டது:

'என்னை ஒருவன் கையால் குத்தினாலே நொறுங்கி விடுகிறேன். ஆனால் இந்தச் செங்கல்லைக் கல்லால் அடித்தாலும் நொறுங்குவதில்லை. நான் ஏன் இவ்வளவு பலஹீனமாக இருக்கிறேன்? செங்கல் ஏன் இவ்வளவு கடினமாக இருக்கிறது?'

மெழுகு உருண்டை வெகு நேரம் யோசித்தது. கடைசியில், 'இப்பொழுதுதான் எனக்கு உண்மை புரிகிறது. செங்கல்லைத் தீயில் சுட்டு எடுத்திருக்கிறார்கள். அதனால்தான் அது அவ்வளவு கடினமாக இருக்கிறது. என்னையும் அப்படிச் சுட்டுக் கொண்டால் நானும் உறுதியாக இருப்பேன்' என்று எண்ணிக் கொண்டு அது நெருப்பில் போய் விழுந்தது. விழுந்ததுமே அது கரைந்து உருகி அழிந்து விட்டது.

ஒன்றைக் கெட்டியாக உறுதிப்படுத்துவது, மற்றொன்றை உருக்கி அழித்து விடுகிறது.

### மீன்களோடு ஒப்பந்தம்

பறவைகளை எதிர்த்துப் போர் செய்வதற்குத் தங்களுக்குப் பக்கபலம் வேண்டும் என்று மிருகங்கள் நினைத்தன. அதனால் மீன்களோடு சிநேக ஒப்பந்தம் பண்ணிக் கொண்டன. போர் ஆரம்பமாயிற்று. ''படைகள் அனுப்புங்கள்'' என்று மீன்களுக்கு மிருகங்கள் தகவல் அனுப்பின.

மீன்கள் ஒப்பந்தப்படி மிருகங்களுக்குப் பக்கபலமாகப் படைகள் அனுப்ப வேண்டியிருக்க, அதற்குப் பதிலாக, ''எங்களால் தரையில் நடக்க முடியவில்லை'' என்ற சமாசாரத்தையே அனுப்பி வைத்தன.



## சிலும்பில்லா தானியம்



தானியக் கதிர்களில் முட்களைப் போல் இருக்கும் சிலும்புகள். அறுவடை செய்யும் வேலைக்காரர்களின் விரல்களைக் குத்திக் கொண்டும் அறுத்துக் கொண்டும் இருந்தன. இதைப் பார்த்த ஒரு குடியானவன் தன்னுடைய வயல்களில் சிலும்பே இல்லாமல் தானியம் விளைய வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்தான். கடவுளும் அப்படியே வரம் கொடுத்தார். அவன் வயல்களில் சிலும்புகளே இல்லாமல் கதிர்கள் விளைந்தன. இது பறவைகளுக்கு வசதியாகப் போய்விட்டது. குறைந்த நேரத்தில் எல்லாத் தானிய மணிகளையும் சுலபமாகக் கொத்தித் தின்று விட்டுப் பறவைகள் போய்விட்டன. பாதுகாப்பாக இருந்த சிலும்புகளை இழந்ததற்காகக் குடியானவன் மிகவும் வருந்தினான் "எவ்வளவு முட்டாள்தனமான காரியத்தைச் செய்து விட்டேன். என்னுடைய வேலைக்காரர்களின் விரல்களைக் காப்பாற்ற நினைத்து, எங்கள் எல்லாருக்குமே ஜீவாதாரமாக இருந்ததை இழந்துவிட்டு நிற்கிறேனே" என்று துயரத்தில் மூழ்கினான்.



# மகாத்மாவின் முன்னோடி

அமெரிக்கரான ஹென்றி டேவிட் தோரோ எழுதிய "பொதுஜன ஒத்துழையாமை" என்ற சின்னஞ் சிறு புத்தகம்தான் மகாத்மாவின் மாபெரும் இயக்கங்களுக்கு அஸ்திவாரமாக அமைந்தது எனலாம்.

தோரோ 1817ம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள மஸாசூசெட்ஸ் மாநிலத்தில் பிறந்தவர். பள்ளி நாட்களில் தனது பொழுதை எல்லாம் நூல்நிலையங்களிலேயே கழித்தவர். இயற்கையின் பெரும் ரசிகர் அவர். கான்கார்ட் என்ற சிற்றூரில் பள்ளி ஆசிரியராகப் பணி புரிந்தபடி இயற்கையின் கவின்பெறு வனப்பைக் கண்டு களித்தார்.

ஞானி ரால்ப் வால்டோ எமர்ஸனின் நட்பினால் தோரோ சிற்றின்பங்களையும் நிலையில்லா பொருட் செல்வத்தையும் வெறுத்தார். எளிய வாழ்க்கை நடத்த விரும்பி கான்கார்ட் அருகில் சிறு குடில் ஒன்றை அமைத்துக் கொண்டு தன்னந் தனியாக வாழ ஆரம்பித்தார்.

தோரோவின் கானக வாழ்வில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. 1843ம் ஆண்டில் அமெரிக்க அரசு பல்லாயிரக் கணக்கான நீக்ரோ மக்களை அடிமைகளாகவே வைத்திருக்க விரும்பியதை எதிர்த்து, வாக்குரிமைக்கான வரியைச் செலுத்த தோரோ மறுத்தார். இதற்காக அவர் கைது செய்யப்பட்டார். அவரது விருப்பத்துக்கு மாறாக அவரது உறவினர் ஒருவர் வாக்குரிமை வரியைச் செலுத்தி விடவே தோரோ விடுதலை செய்யப்பட்டார்.



தோரோவின் மனம் அந்த 'வரிகொடா' அனுபவத்துக்குப் பின்னர் அரசியலைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தது. ஆறு ஆண்டு சிந்தனையின் பலனே "பொதுஜன ஒத்துழையாமை" என்ற நூல்.

"தனி மனிதனின் சுதந்திரத்தில் அரசாங்கம் — அது வலிமை மிக்கதாயினும் — தலையிடவே கூடாது. அப்படித் தலையிட்டால் அந்த அரசாங்கத்தைச் சுதந்திர அரசாங்கமாகக் கூறமுடியாது" என்பது அச் சிறு நூலிலுள்ள ஒரு பெரும் வாக்கியம்.

"அரசாங்கம் என்றுமே அறிஞர்களின் ஆலோசனைகளைப் புறக்கணிப்பதில் தவறுவதில்லை" என்பதும் அதில் காணும் வாசகமே.

சில ஆண்டுகளில் அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் மூண்டுவிட்டதால் தோரோவின் புத்தகம் அந்தக் காலத்தில் அதற்குரிய கவனம் பெறவில்லை.

1907ம் ஆண்டில் தென் ஆப்பிரிக்காவில் காந்தியடிகள் போராட்டம் ஒன்றை நிகழ்த்தத் திட்டமிட்டுக் கொண்டிருக்கும் போதுதான் தோரோவின் புத்தகத்தை அவர் படிக்க நேர்ந்தது. அண்ணலின் நெஞ்சத்தில் ஆழ்ந்த சிந்தனைகளை அப்புத்தகம் எழுப்பிவிட்டது. காந்தியடிகள் அப்புத்தகத்தின் சில பாகங்களை குஜராத்தியில் தாமே மொழிபெயர்த்துச் சிறு துண்டுப் பிரசுரங்களாக வெளியிட்டார். மகாத்மாவின் பலவிதமான போராட்டங்களுக்கு தோரோவின் புத்தகம் ஆதாரமாக இருந்தது.

—அ. இராமதுரை




- பணியில் பங்கு
- பொறுப்பு யாருடையது?
- வேற்று நாடும் வேறு தலைமுறையும்
- பண்பாளர் அங்கும் உண்டு
- கருணைமொழி

கல்கி 17-9-67 இதழில் வெளியாகியுள்ள ''மாணவர்களை வசப்படுத்திய ஸ்டேஷன் மாஸ்டர்'' என்னும் கட்டுரையில் கடைசிப் பகுதியில் சொல்லப்பட்ட (1952ல் விழுப்புரம் ஸ்டேஷனில் புயலால் பாதிக்கப்பட்ட) சம்பவம் நடந்த சமயத்தில் என் தகப்பனார் திரு கே. திருமலை அய்யங்கார் என்பவர் ஸ்டேஷன் சூபரின்டெண்டாகப் பணி ஆற்றியுள்ளார். எனவே கட்டுரையில் குறிப்பிட்ட சிறப்பில் என் தந்தையாருக்கும் பங்கு உண்டு என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பம்பாய்-22 — செல்லா ராகவன்

சீர்காழி யூனியனைச் சேர்ந்த வைத்தீசுவரன் கோவில் யூனியன் பள்ளியில் நான் இறுதியாகப் பணியாற்றினேன். வேலையிலிருந்து ஓய்வு பெற்று ஒரு வருடம் ஆறு மாதம் ஆகிறது. ஆனால் இன்றுவரை எனக்கு வரவேண்டிய உதவிப் பணம் வந்து சேரவில்லை. பல ஆசிரியர்கள் இப்படித் தவிக்கின்றனர். யூனியன் காரியாலயத்தில் கேட்டதற்கு கல்வி இலாகாவுக்கு எழுதியுள்ளதாகக் கூறுகிறார்கள். டி. பி. ஐ. அலுவலகத்தில் போய்க் கேட்டதற்கு 'இதற்கும் எங்களுக்கும் சம்பந்தம் இல்லை' என்கிறார்கள். கல்வி சம்பந்தப்பட்ட டைரக்டரோ கனம் மந்திரி அவர்களோ இதனைக் கவனித்து ஓய்வு பெற்ற ஆசிரியர்களின் துயர் துடைப்பார்களா?

திருக்கடையூர் — சரஸ்வதி அம்மாள்

கல்கி 3-9-67 இதழில் வெளியான மொழிக் கொள்கை பற்றிய தலையங்கம் மிகவும் பிரமாதம். அதிலும் பாடமொழிக்கு விளக்கம் கூறும் கடைசிப் பாரா சிறப்பாக இருந்தது. கல்வி விஷயத்தில் தவறு ஏற்படின் வருங்கால மக்களின் சமுதாயமே தவறான பாதைக்கு அழைத்துச் செல்லப்படும். வருங்கால மக்கள் குலத்தின் அறிவு வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் உரிமை எந்த அரசுக்கும் கிடையாது. இச்சமயத்தில் அமெரிக்க ஜனாதிபதி தாமஸ் ஜெபர்ஸன் கூறியதே என் நினைவுக்கு வருகிறது. ''வேறு வேறு தலைமுறைகளை நாம் வேறு வேறு நாடுகள் என்றே கருதலாம்; அதனதன் பெரும்பான்மையினரின் மனப்படி தன்னைத் தானே கட்டுப்படுத்தும் உரிமை அந்தந்தத் தலைமுறைக்கு உண்டு. ஆனால் அடுத்து வரும் தலைமுறைகளைக் கட்டுப்படுத்தும் உரிமை கிடையவே கிடையாது — மற்றொரு நாட்டின் மக்களைக் கட்டுப்படுத்த உரிமை இல்லாததுபோல'' என்றார் அவர்.

சென்னை-43 — இரா. பாலாஜி

மேதகு தமிழக முதலமைச்சர் அறிஞர் அண்ணாவைப் பற்றி கல்கி எழுதியுள்ள 'எல்லோருக்கும் நல்லவர்' கட்டுரையில் உண்மையையும், நடுநிலைமையையும் பரிபூரணமாகக் கண்டேன்.

திருமங்கலம் — அ. பாண்டியராஜன்

பம்பாயில் தோன்றியிருக்கும் 'சிவசேனா' இயக்கத்தைப் பற்றிச் சமீப காலமாகச் செய்திகள் எல்லாப் பத்திரிகைகளிலும் அடிபடுவதை மக்கள் அறிந்திருப்பார்கள். இதைக் கொண்டு மராட்டிய மாநிலத்தில் வாழும் எல்லா மகாராஷ்டிரர்களும் இந்த இயக்கத்தை ஆதரிப்பதாக எண்ணுவது மாபெரும் தவறு. மகாராஷ்டிர மக்கள் பண்பால் எந்த விதத்திலும் மற்றவர்களுக்குக் குறைந்தவர்கள் அல்லர். ஆனால் சில சுயநலவாதிகள் எங்கும் இருக்கத்தான் செய்கிறார்கள். பம்பாய் சுதந்திரக் கட்சிச் செயலாளர் திரு மது மேத்தா அவர்கள் கூறியதுபோல் இடது சாரிக் கம்யூனிஸ்டுகள் இந்த இயக்கத்தைச் சேர்ந்த சிலரைத் தங்களுக்குச் சாதகமாகக் குழப்பம் விளைவிக்கப் பயன்படுத்தி வருகிறார்கள். இதில்தான் மகாராஷ்டிர அரசு கவனமாக இருக்க வேண்டும். மேலும் இந்த இயக்கத்துக்கு மறு இயக்கம் தொடங்குவதோ, அல்லது இதை எதிர்த்து மற்ற மாநிலங்களில் போராட்டம் நடத்துவதோ சிவசேனைக்காரர்களின் உணர்ச்சியை மேலும் தூண்டிவிடுவதாகவே முடியும்.

பம்பாய் — ப. வெ. ரங்கராஜன், கு. ரங்கராஜு

கல்கியில் தொடர்ந்து வெளிவரும் காமகோடியின் கருணைமொழிப் பகுதியைப் பக்தியோடு படித்துவருபவர்களில் நானும் ஒருவன். ''அவரவர்கள் நிறைவை உண்டுபண்ணிக் கொள்ள வேண்டும் என்பதுதான் நம் மதம்'' என்று 17-9-67ல் வெளியாகியுள்ள ஆசாரியாளின் கருணை மொழியைப் பார்த்தபோது கண்களில் நீர்மல்கியது. அவர் ஒருவராலேயே கொடுக்கக் கூடிய அற்புதமான தத்துவ விளக்கம் அதில் அடங்கியுள்ளது:

''சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா!''

என்ற பாரதி வாக்கின் உண்மை ஆசாரியாளின் அருமையான தத்துவ விளக்கங்களைத் தொழுது படித்தவர்களுக்கே முற்றிலும் விளங்க முடியும்.

குன்றத்தூர் — வி. ச. வாசுதேவன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor : T. Sadasivam

# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?

## இன்றே ஸில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு. உச்சந்தலையிலே தினவு. கார்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மைதான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின் – கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று செறிந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி, ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றாடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன்பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் ட்ரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள் ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

**ஸில்விக்ரின்**

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

LPE-Aiyars S. I TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி